


"ஹா!
**லைப்பாய் சோப்பை**
உபயோகித்து குளிக்க
வேண்டிய நேரம் இதுதான்."

– அது சரீரத்தை சுத்தமாக்கு
வதுடன் புத்துணர்ச்சியைத்
தருகிறது!

L. [illegible]-50 TM

இந்தியாவில் தயாரித்தது.

மலர் 14
இதழ் 53




மன்மத ௵
ஆடி 15

1955 ஜுலை 31



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

விழி வீச்சுக்காரி அவள்
வாள் வீச்சுக்காரன் அவன்
இவர்கள் இருவருக்கும் நடந்த போட்டியில்
வெற்றி அவளுக்கா,
அவனுக்கா ?



....ஆர். ஆர். பிக்சர்ஸ்....

# குலேபகாவலி

டைரக்ஷன்
ராமண்ணா

வசனம், பாடல்கள்
தஞ்சை ராமையாதாஸ்

ஒளிப்பதிவு. T.K.ராஜாபாதர்



ஜூலை
29உ முதல்
தென்னாடெங்கும்





சென்னை ஸ்ரீ கிருஷ்ணா - கெயிட்டி - ராஜகுமாரி - உமா



மலர் 14 } இதழ் 53 }

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

{ மன்மத ஆடி 15

# யாருக்கு வெற்றி?

உலகத்தைப் பயமுறுத்தி வரும் அபாயம் இன்னும் நீங்கிய பாடாக இல்லை. ஆயினும் ரஸாபாஸம் எதுவும் இல்லாமல் நான்கு வல்லரசுகளும் ஒன்று கூடி சிநேக பாவத்தோடேயே ஜெனீவாவிலிருந்து திரும்பினார்கள். மறுபடியும் மூன்று மாதங்களுக்குப் பின்பு கூடுவார்கள். அதற்குள் நான்கு வல்லரசுகளும் தங்கள் தங்கள் தனி ஆலோசகர்களுடன் கலந்து விவரமான சமாதானத் திட்டங்களைத் தயாரித்துக் கொண்டு வருவார்கள். அதன் மேல் மீண்டும் சந்தித்துப் பேச்சுக்கள் நடக்கும் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது.

மொத்தத்தில் சமாதான மனப்பான்மை விருத்தியடைந்திருக்கிறது என்று சொல்ல வேண்டும். போருக்கு இடமில்லை; மனமும் இல்லை.

ஆனால் பரஸ்பரம் பயம் நீங்கின பாடில்லை. யுத்த ஏற்பாடுகளும், அதற்கான தயாரிப்புக்களும், ஒழிந்து உலகத்தின் பொது நலனுக்கு வேண்டிய காரியங்களில் எல்லாரும் ஒருமனதாக ஈடுபடுவதற்கு அவசியமாக வேண்டியது சாந்தி யல்லவா? அந்த சாந்தியும் நிம்மதியும் இன்னும் உண்டாகவில்லை.

வெந்நீர், தண்ணீர், பனிக்கட்டி என்று நீர் மூன்று வடிவம் கொள்ளும். மூன்று வெளி உருவங்கள் எடுத்துக் கொண்டாலும் நீர் நீரேதான்! அதைப் போலவே யுத்தமும் பல வடிவங்கள் கொண்டு வருகிறது. 'எரியும் யுத்தம்' என்றும், 'தண் யுத்தம்' என்றும், இரண்டு விதமான யுத்த நிலைகள் உண்டு என்பது இப்பொழுது பலரும் அறிந்த விஷயம். தண் யுத்தம் இந்த ஜெனீவா சந்திப்புக்குப் பிறகு ஒருவாறு உறைந்த நிலை அடைந்து விட்டது என்று சொல்லலாம். ஆனாலும் அபாயம் ஒழிந்து விடவில்லை.

எரி யுத்தத்தைவிடத் தண் யுத்தமே உலகத்தின் தீராத வியாதி! ஒன்று மலேரியாக் காய்ச்சலைப் போல, மற்றொன்று க்ஷய ரோகத்தைப் போல!

ருஷியாவும் அமெரிக்காவும் ஒருவரை ஒருவர் பகைக்கலாம். அல்லது சமாதானம் செய்து கொண்டு கைகோத்துச் சிரிக்கலாம். இதனால் உலகத்தின் அச்சம் நீங்கி விட்டதோ? இல்லை.

நால்வர் என்பது வெறும் வக்கணைதான். உண்மையில் இரண்டு வல்லரசுகள், அதாவது அமெரிக்காவும் ருஷ்யாவும் கூடிப் பேசி இப்போது ஊருக்குத் திரும்பினார்கள். கூடிப் பேசுவதும் ஒருவர் மேல் ஒருவர் வசை மொழிகள் வழங்கித் தங்கள் தங்கள் கட்சியினரைத் திருப்தி செய்வதும் விடுத்து, பரஸ்பர சிநேகத்தை வளர்க்கும் நோக்கத்துடன் நடந்து கொண்டதே பெரிய லாபம். அதோடு நிற்காமல் அதற்கு மேலும் இன்னும் கொஞ்சம் புத்தி தெளிந்து உண்மையான உலக சாந்தி நிலைப்பதற்கும் வழி தேடினார்களானால், அகில உலகமும் மகிழ்ச்சி அடையும்.

இருவருக்குள்ளும் சமாதானம் ஏற்படுத்திக் கொள்ளுவது என்பது வேறு: உலகத்துக்கு சாந்தி உண்டாக்கித் தருவது என்பது வேறு.

முன் காலங்களிலெல்லாம் இரண்டு நாடுகள் அல்லது இரண்டு கட்சிகள் யுத்தத்தில் இறங்கினால் அவர்களுக்கு மட்டுமே நாசம். அவர்களுக்கு மட்டுமே லாப நஷ்டம்! இப்போதோ அப்படி யில்லை. எந்த இரண்டு நாடுகளுக்குள்ளும் யுத்தம்

நடந்தால் அல்லது யுத்த முஸ்தீபுகள் நடந்து கொண்டு வந்தால், உலகம் முழுதுக்குமே சேதம், அபாயம், பயம்!

சாந்தி வேண்டும் என்று உலகம் ஆசைப்படுகிறது. அது இன்னும் உண்டாகவில்லை. காத்திருக்கவே வேண்டியிருக்கிறது.

ஜெனிவா அத்தியாயத்தில் அணு குண்டு 'நான் பிழைத்தேன்' என்று கூவித் திரும்பிற்று. அதை ஒழித்துக் கட்ட அமெரிக்காவுக்கு இன்னும் ஆன்ம பலம் உண்டாகவில்லை. தோற்றது இரண்டு வல்லரசுகளுமேதான்! இதுவரையில் ஜெயித்தது பிசாசு!

# பி. ஸி. ஜி

ஜூன் மாதம் இறுதியில் அடியில் கண்ட கடிதம் ஒன்று ராஜாஜிக்கு வந்தது.

பாப்பம்மாள்
காலஞ்சென்ற ஆறுமுக முதலியார் மனைவி
11/195, லிங்கப்ப செட்டித் தெரு,
கோயம்புத்தூர்.

மகாகனம் ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் சமூகத்துக்கு, அநேகம் வணக்கம்.

என் கணவர் ஆறுமுக முதலியார் கோவை காளீஸ்வரா மில் தொழிலாளியாக இருந்தார். வயது நாற்பது. அவர் சென்ற நவம்பரில் பி. ஸி. ஜி மருந்து ஊசி போட்டுக் கொண்டார். பின் ஒரு வாரத்துக்குள்ளாக உடம்பு வலி, தலை நோவு, அசீகை, இருமல், காய்ச்சல் முதலிய உபாதைகள் ஆரம்பித்தன. தக்க சிகிச்சை செய்தும் குணம் ஏற்படவில்லை. பிறகு சென்ற ஜனவரி மாதம் முதல், மில் இன்ஷூரன்ஸ் டாக்டரிடம் சிகிச்சை செய்து கொண்டார். காய்ச்சல் மேலிட்டதுடன் மலமூத்திரத் தடங்கல்களுடன் விக்கலும் ஏற்பட்டது. பிறகு அந்த டாக்டரே 1955 மார்ச்சு மாதம் 14-ந்தேதி கோவை தலைமை ஆஸ்பத்திரியில் சேர்த்தார். 18-ந் தேதி டி. பி. மெனின்ஜைட்டிஸ் என்று கண்டுபிடித்து சிகிச்சை செய்தார்கள். பலனில்லாமல் 19-ந் தேதி மாலை என்னை அனாதையாக விட்டுச் சிவபதம் அடைந்தார்கள்.....................

இத்துடன் கோவை முனிசிபாலிட்டி மரண சர்டிபிகேட் நகலும் அனுப்பியிருக்கிறேன்.

இப்படிக்கு, தங்கள்
பாப்பம்மாள்.

இந்தக் கடிதத்துடன் அனுப்பப்பட்ட மரண ரிஜிஸ்டர் நகல் அடியில் காணலாம்:

கோயம்புத்தூர் முனிஸிபாலிடி மரண ரிஜிஸ்டர் 1955 மார்ச்சு மீ பக்கம் 10.

ஆண்டு வரிசை: 301; மாதவரிசை: 83; பெயர்: ஆறுமுகம்; தகப்பனார் பெயர்: கஞ்சப்ப முதலி; ஆண்; வயது: 40; ஜாதி: ஹிந்து; தொழில்: மில் தொழிலாளி; எவ்விடம் இறந்தது: ஹெட்குவார்ட்டர் ஆஸ்பத்திரி; மரணத்தின் காரணம்: டி. பி., மெனின்ஜைடிஸ் (க்ஷயம், மூளைக் கேடு); மரணத் தேதி: 19—3—55; பதிவுத் தேதி: 24—3—55; யார் மூலம் பதிவு: ஆஸ்பத்திரி மெடிகல் ஆபீஸர் ரிபோர்ட்டு; கையெழுத்து: ஆர். வேதபுரி; அடக்கம் செய்த இடம்: சொக்கம் புதூர்; இறந்தவர் குடியிருந்தது: கோயம்புத்தூர், லிங்கப்ப செட்டி தெரு.

கோயம்புத்தூர் முனிஸிபல் ஆபீசு, 9-4-1955. ஆர். வேதபுரி, ஜனன மரண பதிவு உத்தியோகஸ்தர்.

இந்த விஷயத்தை ராஜாஜி கோயம்புத்தூரில் தம்முடைய வக்கீல் நண்பர் ஒருவருக்கு அனுப்பி விசாரிக்கக் கேட்டார்கள். வந்த கடிதத்தையும் முனிஸிபல் மரணப் பதிவு நகலையும் சென்னை சுகாதார மந்திரிக்கு ராஜாஜி அனுப்பி விஷயத்தை விசாரிக்கக் கேட்டுக் கொண்டார். அப்படி அனுப்பியது ஜூலை மாதம் 10-ந் தேதி. அதற்கு நாளை வரை பதில் வரவில்லை. ஆனால் பத்திரிகைகளில் ஒரு அறிக்கை ஜூலை மீ 22-ந் தேதியில் வெளியாயிற்று. அது பின்வருமாறு:

**பி. ஸி. ஜி ஊசிக் குத்தல்:**

சென்னை, ஜூலை 22உ.

பி. ஸி. ஜி ஊசிக் குத்து சம்பந்தமாக, வியாதி விஷயங்களுக்கு இடம் கொடுக்காத காப்பு முறைகள் அனைத்தையும் கையாள வேண்டும் என்று, சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறார்கள். டூபெர்குலின் சோதனையும், பி. ஸி. ஜி ஊசிக் குத்தும் செய்யப்பட்டவர்களின் பெயர்களும் விலாசங்களும் ஒரு ரிஜிஸ்டரில் பதிந்து வைக்க வேண்டும் என்றும் சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறார்கள். டூபெர்குலின் சோதனையினாலும், பி. ஸி. ஜி ஊசிக் குத்தினாலும் ஏற்படுகிற எல்லாக் கோளாறுகளையும் அங்கங்குள்ள ஸர்க்கார் ஆஸ்பத்திரிகளில் கவனிக்க வேண்டும். சென்னை ராஜ்ய வைத்திய சுகாதார இலாகாத் தலைவர்கள் இருவருக்கும் இந்த விஷயமாகத் தகுந்த உத்தரவுகள் அவரவர் உத்தியோகஸ்தர்களுக்கு அனுப்ப வேண்டும் என்று தெரிவிக்கப் பட்டிருக்கிறது.

ராஜாஜியின் கடிதத்துக்குச் சுகாதார மந்திரியிடமிருந்து யாதொரு பதில் தகவலும் இதுவரையில் வரவில்லையாயினும், அடியில் கண்ட கடிதமும் வாக்குமூலங்களும் கோயம்புத்தூர் நண்பரிடமிருந்து சென்ற சனிக்கிழமை 23-7-55 ல் வந்தன.

அன்புள்ள ஐயா,

தங்கள் 2—7—55 ந் கடிதம்.

பதில் எழுதுவதில் ஏற்பட்ட தாமதத்துக்கு மன்னிக்க வேண்டும். தாங்கள் கூறியுள்ளது போல், சரியான தகவல்கள் சேகரிப்பது கஷ்டமாகவே இருந்தது. அதே வீட்டில் வசிக்கும் வேறு குடித்தனக்காரர் கொடுத்திருக்கிற பிரமாண வாக்குமூலங்களைத் தவிர, பி. ஸி. ஜி ஊசி குத்தியதற்கு முனிஸிபாலிட்டியாரின் பதிவுத் தகவல்கள் ஒன்றும் கிடையாது. ஆரம்பத்தில் பி. ஸி. ஜி ஊசிக் குத்துப் பிரசாரத்தில் மிகவும் ஈடுபட்ட உற்சாகிகளில் நானும்

ஒருவன். எல்லா மக்களும் இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு பி. ஸி. ஜி ஊசி குத்திக் கொள்ள வேண்டும் என்று எனது வார்ட் ஜனங்களை வேண்டிக் கொண்டு ஒரு துண்டுப் பிரசுரங்கூட என் செலவிலேயே நான் வெளியிடவும் செய்தேன். ஆகையினால் எனக்கு இது விஷயமாய் நன்ருகத் தெரியும். பி. ஸி. ஜி ஊசி குத்தியபிறகு, குத்தப்பட்டவர்களுடைய தகவல் அடங்கிய பதிவுப் புஸ்தகம் ஒன்றும் அதிகாரிகள் வைத்துக் கொள்ளும் வழக்கம் இல்லை என்பது எனக்குத் தெரியும். டுபெர்குலின் சோதனை ஊசிக்குத்து செய்ததும், ஒரு அச்சடித்த காகிதத்தில் ஒரு ஆளுக்கு ஒரு கோடு என்று போட்டுக்கொள்ளுவார்கள், எத்தனை பேர் என்று எண்ணுவதற்கு. இப்படி ஒரு அடையாளம், அவ்வளவு தான். இந்த டுபெர்குலின் போட்டதும், மூன்று நாள் கழித்து பி. ஸி. ஜி குத்திக் கொள்ள வரும்படி ஒவ்வொருவரிடமும் சொல்லுவார்கள். டுபெர்குலின் போட்டதற்கு உடம்பில் என்ன பலன் இருக்கிறது என்பதைப் பார்த்துக் கொண்டு பி. ஸி. ஜி போடப் போவதாகச் சொல்லி அனுப்புவார்கள். இந்த பி. ஸி. ஜி இயக்கத்தின் பிரசாரம் காரணமாக, டுபெர்குலின் போட்டுக் கொண்ட ஒவ்வொருவரும் மறுபடியும் குறித்த நாளில் வந்துவிடுவார். டுபெர்குலின் ஊசி குத்தின புண்ணைப் பார்த்து பி. ஸி. ஜி குத்துவார்கள். நான் கவனித்தது என்னவென்ருல், பதினொரு வயதுக்கு உட்பட்ட சின்னஞ்சிறு குழந்தைகளுக்கெல்லாம் டுபெர்குலின் பரிசோதனையின் பலன் எப்படி யிருந்தாலும் பி. ஸி. ஜி ஊசி குத்தி விடுகிருர்கள்.

அச்சடித்த காகிதத்தில் போட்டுக் கொள்ளுகிற எண்ணிக்கைக் கோடு தவிர, யாருக்கு ஊசி போடப்பட்டது என்று தெரிந்து கொள்வதற்குரிய வேறு தகவல்கள் ஏதும் அதிகாரிகள் வைத்துக் கொள்வதில்லை. நிலைமை இப்படி யிருப்பதால், அக்கம் பக்கத்தாரின் வாக்குமூலம் தவிர ஊசி குத்தினதற்கு வேறு அத்தாட்சி கிடையாது.

இத்தனை நன்மை தருவதாகச் சொல்லி, இந்த பி. ஸி. ஜி ஊசி குத்தி வரும்போது, குத்தினவர்களுடைய பெயரும் விவரமும், ஏன் சரியாக எழுதிக் கொள்ளும் முறையை அதிகாரிகள் கையாளவில்லையோ,—எனக்குத் தெரியவில்லை. ஆச்சரியமாகத்தான் இருக்கிறது!

எனவே, இறந்துபோன ஆறுமுக முதலி விஷயத்தில் அதே வீட்டில் வசிக்கும் குடித்தனக்காரர் வாக்குமூலத்தை நாம் ஆதாரமாகக் கொள்ளுவது அவசியமாகிறது. அவர்கள் ஆறுமுக முதலியாருக்கு பி. ஸி. ஜி ஊசி போட்டதென்று வியக்தமாகப் பிரமாணத்தின் பேரில் சொல்கிருர்கள்.

இறந்து போனவர் முதலில் ஸ்ரீ ஹரன் என்ற ஆயுர்வேத வைத்தியரால் சிகிச்சை செய்யப்பட்டார். அவர் சொல்கிருர்: இறந்த ஆறுமுக முதலி முதலில் உள் ஜுரமும் அதிக இருமலும் இருப்பதாகச் சொல்லிக் கொண்டு தம்மிடம் வந்தார். தம்முடைய மருந்தின் குணம் இல்லாமல் போகவே, மில் டாக்டர் ஸ்ரீ ஸர்க்காரிடம் அவர் சென்றதாய் ஸ்ரீ ஹரன் கூறுகிருர். ஸ்ரீ ஸர்க்காரை விசாரித்தேன். அவர் தாம் சிகிச்சை ஏதும் கொடுக்கவில்லை என்றும், தொழிலாளியின் நிலைமையைப் பார்த்து, தாமே பெரிய ஆஸ்பத்திரியில் கொண்டு போய்ச் சேர்த்ததாகச் சொல்கிருர். தனியாகப் பேசும்போது அவர் பி. ஸி. ஜி யை எதிர்த்துச் சொன்ன போதிலும், அவர் தமது கொள்கையைப் பகிரங்கமாய்ச் சொல்லப் பயப்படுகிருர். ஆஸ்பத்திரிப் பதிவுப் புஸ்தகத்தில் பி. ஸி. ஜி ஊசி குத்தும் சம்பவங்கள் ஒன்றும் எழுதப்படவில்லை. ஆஸ்பத்திரி பதிவுப் புஸ்தகத்தில் நோயாளியின் பெயர், வயது முதலிய வழக்கமான விவரங்கள் மட்டும் இருக்கின்றன. என்ன நோய் என்பது ஆராய்ச்சியில் இருக்கிறது என்று குறிப்பு.

ஆபரேஷன் தேவைப்படும் என்று கருதி அவரை ரணசிகிச்சை வார்டிலேயே வைத்திருந்தார்கள். அந்த வார்டிலுள்ள பதிவுப் புஸ்தகக் குறிப்புகளைச் சேகரிக்க என்னுல் இயலவில்லை. இத்துடன் வாக்குமூலங்கள் அனுப்பி யிருக்கிறேன். எனக்குக் கொடுத்த வேலையைச் சரியாகச் செய்திருக்கிறேனே என்னவோ தெரியவில்லை. ஆனல் முடிந்த வரையிலும் செய்திருக்கிறேன்.

### இறந்தவர் மனைவியின் வாக்குமூலம்

நஞ்சப்ப முதலி குமாரர் ஆறுமுகம், வயது நாற்பது, காளீச்வரா மில் தொழிலாளி, கோயம்

சென்ற மே மாதம் 13-ம் தேதி வள்ளியூர் வி. ரங்கய்யர் குமாரரும் பாட்ணு பாரத் காபி ஹவுஸ் புரொப்ரைட்டருமான சிரஞ்சீவி V. R. S. மணிக்கும், சேர்த்தலை வக்கீல் கே. கிருஷ்ணய்யர் குமாரி சௌபாக்யவதி லலிதாம்பாளுக்கும் மணமகள் இல்லத்தில் திருமணம் சிறப்பாக நடந்தது.

வாழ்க, மணமக்கள்!



உறங்காய், கண்ணே !



# மற்றொரு அருமைக் குழந்தை!

அமெரிக்காவின் அங்கீகாரத்துடன் தெற்கு வியட்நாம் பிரதமர் டியெம் சர்வதேசக் கமிஷனுக்கு எதிராகக் கலகம் செய்யத் தூண்டினர் என்று ஒரு செய்தி கூறுகிறது.

# அவர் சுதந்திரம்!

புத்தூர். அவருக்கு பி. ஸி. ஜி ஊசி குத்தப்பட்டு அவர் இறந்து போனது சம்பந்தமாக விசாரணை செய்த விவரங்கள் :—

காளீச்வரா மில்லில் வேலை செய்யும் பாப்பம்மாள் (மூப்பத்து மூன்று வயது; விலாசம்: 11/195, லிங்கப்பச் செட்டி தெரு, கோயம்புத்தூர்) முதலில் விசாரிக்கப் பட்டாள். அவள் வாக்குமூலம் எழுதிக் குறித்துக் கொள்ளப்பட்டது.

ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் அவர்களுக்குப் பாப்பம்மாள் தனது கணவனுடைய மரணத்தைக் குறித்து எழுதியதாக ஒப்புக் கொண்டாள். அவள் சொன்னதாவது :

“ நான் காலஞ் சென்ற ஆறுமுகத்தின் மனைவி. நான் இப்போது காளீச்வரா மில்லில் ரீலிங் செக்ஷனில் வேலை செய்யும் ஒரு தொழிலாளி. சென்ற நவம்பரில் பி. ஸி. ஜி இயக்கம் தீவிரமாக இருந்தபோது, என்னுடைய வீட்டுக்காரருக்கு பி. ஸி. ஜி சாவடியில் ஊசி குத்தினார்கள். முதலில் முன் கையில் குத்தினார்கள். இரண்டு மூன்று நாள் கழித்து வாக்ஸிநேடரின் யோசனைப்படி மறுபடியும் ஒரு ஊசி குத்தினார்கள்.

இதன் பிறகு அவருக்குக் கடினமான வறட்டு இருமலும் காய்ச்சலும் வந்தது. இதற்கு முன்பு அவருக்கு இலேசாகக் குளிர் காய்ச்சல் வருவதுண்டு. ஊசி குத்தின பிறகு பல கோளாறுகள் உண்டாயிற்று. நான் பக்கத்தில் வைத்தியசாலை வைத்திருக்கும் டாக்டர் ஹரனிடம் இதைச் சொன்னேன். மூச்சியெல்லாம் இராத இருமலுக்கு இப்பொழுது என்ன காரணம் என்று என் புருஷனைக் கேட்டேன். பி. ஸி. ஜி ஊசியினால் வந்த தொல்லைதான் இதெல்லாம், என்று அவர் சொன்னார். அவர் மில் டாக்டர் ஸர்க்கார் என்பவரிடம் போய் மருந்து சாப்பிட்டார். பிறகு பெரிய ஆஸ்பத்திரிக்குப் போய் அங்கே இருந்தார். அவருக்கு உடம்பு அதிகமாகி அபாயமாகயிருந்ததால் டாக்டர் ஸர்க்கார் என்பவரே பெரிய ஆஸ்பத்திரியில் அவரைச் சேர்த்தார். நாலைந்து நாட்களுக்குப் பிறகு என் வீட்டுக்காரர் இறந்து போனார்.

ஜாதலை ஆரூர்தேதி
— இடது கைப் பெருவிரல் அடையாளம்
பாப்பம்மாள்

## சாட்சி 1

அருணாசல முதலியார், அண்ணாமலை முதலியார் குமாரர், வயது 52, ஸி. எஸ். அன்ட் டபிள்யூ. மில்ஸ் தொழிலாளி.

குடியிருப்பு: 195, லிங்கப்பச் செட்டி தெரு, கோயம்புத்தூர்.

அவருடைய வாக்குமூலம்: ஆறுமுக முதலியார் வீட்டிலேயே வேறொரு பாகத்தில் நானும் குடியிருக்கிறேன். ஆறு ஏழு மாதங்களுக்கு முன்பு அவருக்கு பி. ஸி ஜி ஊசி குத்தப்பட்டது. என்னுடைய மனைவிக்குக்கூட ஒருமுறை ஊசி குத்தினார்கள். ஆனால் நாலைந்து நாட்கள் கழித்து மறுபடியும் போனபோது இரண்டாவது ஊசி குத்தாமலேயே அனுப்பி விட்டார்கள். அவளுக்குத் தொண்டைப் புகைச்சலும், மூச்சுத் திணறலும் உண்டாயிருக்கிறது. இந்த ஊசிக் குத்துக்கு முன்னால் அவளுக்கு இம்மாதிரித் தொந்தரவு கிடையாது.

ஆறுமுகத்துக்கு இரண்டாவது ஊசியையும் குத்தினார்கள். இதனால் அவருக்குக் கடுமையான வயிற்று வலியும், கடும் இருமலும் உண்டாயிற்று. இந்தத் தொல்லையெல்லாம் பி.ஸி.ஜியினால் வந்தது என்று அவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆறுமுகத்துக்கு நிலைமை மிக மோசமாகும் வரை டாக்டர் ஸர்க்கார் என்பவர் சிகிச்சை பார்த்து வந்தார். பிறகு பெரிய ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். நாலைந்து நாளைக்குப் பிறகு ஆறுமுகம் இறந்து விட்டார். வீட்டுக்கு ஆறுமுக முதலியாரின் பிரேதம் கொண்டு வரப்பட்டது.

## சாட்சி 2

மீனாட்சி அம்மாள், அருணாசல முதலியார் மனைவி, வயது 39. அவள் வாக்குமூலம் :

‘ முன் சாட்சி சொன்னவர் என் கணவர். எனக்குப் பாப்பம்மாளையும் இறந்துபோன அவள் புருஷனையும் தெரியும். இறந்துபோனவருக்குக் கடும் ஜுரமும் இருமலும் இருந்தன. அவருக்கு யாரோ ஒரு டாக்டர் மருந்து கொடுத்தார். அவர் பெயர் எனக்குத் தெரியாது. இறந்து போனவருக்கு இந்தக் கோளாறு, கோயம்புத்தூரில் எல்லாருக்கும் ஊசி குத்தினார்களே, அதற்குப் பிறகு, வந்தது. நானும்கூடச் சாவடியில் ஊசி குத்திக் கொண்டேன். ஆனால் எனக்கு ஒரு தடவைதான் குத்தினார்கள். இறந்து போனவருக்கோ இரண்டு தடவை குத்தினார்கள்.

ஊசி போட்ட பிறகு எனக்கும் கடுமையான இருமல் இருந்து வருகிறது. இதற்கு முன்னால் எந்த விதமான தொந்தரவும் இருக்கவில்லை. இந்த ஊசிக் குத்தினால்தான் என்னுடைய உடம்பு கெட்டுப் போய் விட்டது.

— இடது கைப் பெருவிரல் அடையாளம்
மீனாட்சி

இதற்குச் சாட்சி: அருணாசல முதலியார்.

## சாட்சி 3

பின்னர் டாக்டர் ஆர். எச். ஹரன் விசாரிக்கப்பட்டார். அவருடைய வைத்தியசாலை 195, லிங்கப்பச் செட்டி தெருவில் இருக்கிறது. பாப்பம்மாள் வாக்குமூலத்தில் உள்ள விஷயங்கள் எல்லாம் தமக்கு நேரில் தெரியும் என்று அவர் சொல்கிறார். தாமும் முதலில் சொற்ப நாள் ஆறுமுகத்துக்கு மருந்து கொடுத்ததாகவும், அதன் பிறகுதான் டாக்டர் ஸர்க்கார் என்பவரிடம் அவர் சிகிச்சைக்குப் போனதாகவும் ஹரன் கூறினார். நோயாளியின் நிலைமை மிகவும் மோசமாகி விடவே, டாக்டர் ஸர்க்காரே அவரைப் பெரிய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார். நாலைந்து நாட்களில் ஆறுமுகம் இறந்து விட்டார்.

மேலே கண்ட இந்த சாக்ஷ்யம் எனக்கு வாசிக்கப்பட்டது. சரியாக இருக்கிறது.

6–7–55 ஒப்பம் - ஆர். எச். ஹரன்
பதிவு பெற்ற வைத்தியர்

இது அனாதை பாப்பம்மாளின் கதை.

* * *

அடியில் கண்ட கடிதமும் அனைவரும் படிக்க வேண்டிய ஒரு கடிதம்.

பூஜ்ய ராஜாஜி அவர்கள் திவ்ய பாத பத்ம கமலங்களுக்கு, அனந்த கோடி நமஸ்காரங்கள். இவ்வூர் ஹரிஜன் வகுப்பைச் சேர்ந்தவர், காங்கரஸ் ஊழியர், திரு பெரியசாமி என்பவர் சென்ற வாரம் மதுரை சென்றவர், மதுரையில் தெருவில், பி. ஸி. ஜி ஊசி போட்டுக் கொண்டிருந்தவர்களிடம் போய்த் தனக்குக் காச நோய் உண்டென்றும், தனக்கு இந்த பி. ஸி. ஜி ஊசி போட்டுக் கொண்டால் குணமாகுமா என்றும் கேட்டாராம். குணமாகும் என்று ஒரு ஊசி போட்டார்களாம். அன்று மாலையே நெஞ்சும் பிடரியும், வலிக்க ஆரம்பித்துப் பின்பு, ஊசி போட்ட கை பூரா வீங்கி, கை, முகம், முதுகு முதலிய இடங்களில் அரும்பு அரும்பாக, அக்கி மாதிரி உண்டாகி, கடுமையான ஜுரம். உடலில் பல பாகங்களில் வெட்டி இழுத்தல் முதலிய உபத்திரவங்களுடன், இங்கு அவர் சொந்த இடமான காந்திஜி ஹாஸ்டலுக்கு வந்து படுத்துக் கொண்டார். இரண்டு நாள் இவ்வூர் சர்க்கார் ஆஸ்பத்திரியில் பார்த்தும் பயனில்லை. கடைசியில் என் சக ஊழியர் திரு ஏ. வி. திருப்பதி ரெட்டியார் நேற்று என்னிடம் அழைத்து வந்து இவரை நல்ல டாக்டரிடம் காட்டிக் குணப்படுத்தும்படி கேட்டுக் கொண்டார். நானும் இவ்வூர் டாக்டர் சுப்ரமண்யம் அவர்களிடம் காண்பித்தேன். அவர் இது பி. ஸி. ஜியின் எதிர் விளைவுதான் என்றும், ஒரு வாரம் தம்மிடம் மருந்து சாப்பிடும்படியும் சொல்லி, ஒரு டானிக்கும் எழுதிக் கொடுத்தார். மேற்படி மருந்துக்கு அவரிடம் ரூபாய் இல்லை. நானே வாங்கிக் கொடுத்தேன். பின்பு காலையில் என்னிடம் வந்து, வலி தாங்க முடியவில்லை என்றும் ஏதோ மயக்கம் மயக்கமாக வருவதாகவும் சொல்லி, தான் பெரிய ஆஸ்பத்திரிக்கு (மதுரை எர்ஸ்கின்) போக வேணுமென்று வாதாடினார். மேற்படியாரை மதுரைக்கு அனுப்பி யிருக்கிறேன். இவருக்கு வயது நாற்பது. இவ்வளவு பெரியவர்களே கஷ்டத்தால் துடிக்கிறார்கள். குழந்தைகள் பாடு கேட்க வேண்டுமா! இங்குள்ள டாக்டர்கள் தங்கள் அபிப்பிராயத்தை ஆதரிக்கிறார்கள்.

ஆர். வெங்கடரமணன்
அருப்புக் கோட்டை

"தெருவில் பி. ஸி. ஜி ஊசி போட்டுக் கொண்டிருந்தவர்களிடம் போய், தனக்குக் காசநோய் உண்டென்றும் தனக்கு இந்த பி. ஸி. ஜி ஊசி போட்டுக் கொண்டால் குணமாகுமா? என்றும் கேட்டாராம். குணமாகும் என்று சொல்லி ஊசி போட்டார்களாம்!"

இந்த விநோதம் நடந்து வருகிறது! சுகாதார மந்திரியார் இப்போது விடுத்துள்ள அறிக்கை மிகவும் முக்கியமானது. இந்த அறிக்கையில் கண்ட முக்கிய எச்சரிக்கை முறைகளையும் பதிவு முறைகளையும் இது வரையில் ஊசி குத்தும் அதிகாரிகள் யாரும் கையாள வில்லை என்பது சொல்லாமலே விளங்கும். பதினாயிரக் கணக்கான குழந்தைகளுக்குக் குத்தி விட்டிருக்கிறார்கள். பெயர்களையும் மற்ற விவரங்களையும் குறித்துக் கொள்ளாமலே வேலை நடந்து வந்திருக்கிறது என்பது வெட்ட வெளிச்சம். மேல் நாட்டு நடவடிக்கை முற்றிலும் வேறு. ஒவ்வொருவருடைய பெயரும் விவரங்களும் பதிவு செய்வது மாத்திரமல்ல. குத்தின பிறகு அவர்கள் நிலைமை எப்படி யிருந்து வருகிறது என்பதை விசாரித்துக் கவனித்து வருகிறார்கள்.

எலிகளைக் கொண்டு பரீட்சார்த்தமாக ஊசி குத்தினாலும் எலிகளுக்கு நெம்பர் போட்டு வைத்துத்தான் கவனிக்கிறார்கள். நம் ஊரின் பாடு இப்படி யிருந்து வருகிறது. இந்தக் கதையை வளர்ப்பதே வருத்தமாக இருக்கிறது.

அட்டைப்பட விளக்கம்

## ரவிசந்திரிகா

தன்னுடைய கஷ்டத்தை வெளியே சொல்லிக் கொள்வதே தவறு என்ற ஒரு விசித்திர மனப் போக்குடையவன், ரவீந்திரன். மற்றவர்களும் இந்த மனப் போக்கைத் தங்களுக்குப் பிரயோஜனமான வகையிலேதான் பயன்படுத்தி வந்தார்கள். இத்தகையவனுக்கு டாக்டர் தாமே உதவி வழங்கி எழுதிய கடிதம் எத்தனை புதிய அநுபவமாக இருந்திருக்கும்!

டாக்டர் சுரேஷ் அனுப்பிய புல்லாங்குழலை எடுத்து வைத்துக் கொண்டு கான மழை பொழிய ஆரம்பித்தான் அவன். தன்னை மறந்த நிலையில் அவன் புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்த போது நிகழ்ந்த அந்த எதிர்பாராத சம்பவத்தைச் சித்திரிக்கிறது இந்த வார அட்டைப் படம். 'சர்ப்பகந்தி' என்ற மூலிகையைப் பற்றியும் அதன் தொடர்பு பற்றியும் ஆரம்பத்திலே பார்த்தோம். இப்பொழுது சர்ப்பத்தையும் அதன் பிரவேசத்தையும் மூவர்ணங்களில் சித்திரித்திருக்கிறார் நமது ஓவியர் மணியம்.

# என்ன சேதி?

## தாயின் மணிக்கொடி

ஆகஸ்ட் முதல் தேதியன்று தேசியக் கொடியை எரிப்பது என்பதாக ஈ. வே. ரா. அவர்கள் வகுத்துள்ள திட்டமும், அதைப் பற்றிய செய்திகளும் தினப் பத்திரிகைகளில் வந்த வண்ணம் இருக்கின்றன.

> “பித்தர் என்றே பிறர் கூற
> உலோகம் சிரிக்க நின்று ஆடி
> அமரர் தொழப்படுவாரே!”

என்ற பாடலின் போக்கே நம்முடைய ஈ. வே. ரா. வின் வாழ்க்கையாகப் போயிற்று. அமரர்கள் தம்மைத் தொழுவதற்கு அவர் தவறான வழிகளைத் தேடிக் கொள்வதை விட்டொழித்து, வேறு வழி தேட வேண்டும் என்று கருதுகிறோம்.

ஒரு காரியத்தை ஒருவர் செய்ய முயல்வதற்கு என்ன காரணம் ஏற்பட்டது என்பது முக்கியந்தான். ஆனாலும், என்ன காரணம் ஏற்பட்டாலும், தவறான வழியில் இறங்குவது நியாயம் ஆகிவிடாது. நல்ல காரியத்துக்காகக் கூடத் தப்பான வழியைக் கடைப் பிடிக்கக் கூடாது என்பதே சாமர்த்தியமாகும்.

“ஒரு போலீஸ்காரர் ஆட்சேபித்தாலும் போதும். நீ வைக்கும் காரியத்தை நிறுத்தி விடுவேன். சர்க்கார் தடை போட்டாலோ சொல்ல வேண்டியதில்லை. உடனே இந்த இயக்கத்தை மறந்தே விடுவேன்!” என்றெல்லாம் சொல்லியிருக்கிறார் அல்லவா? இதைப் பற்றி இத்தனை அறிக்கைகள் விட்டு அவரை இவ்வளவு தூரம் கௌரவப்படுத்துவதற்கு என்ன அவசியம் நேர்ந்து விட்டது என்று நமக்குத் தெரியவில்லை. உண்மையில், பெரியார் கோருவது ஆரவாரமேயாகும். அவருடைய பழைய கதை இதுவே என்பது அவருடைய தோழர்களுக்குத் தெரியும்.

“இந்தியாவுக்குச் சுதந்திரமே வேண்டாம். அதனால் நஷ்டமே!” என்று எண்ணியும் பேசியும் வந்தவர்கள், நாட்டுக்குச் சுதந்திரம் வந்து அவர்களும் அந்த சுதந்திரத்தை அடைந்து விட்ட பிறகு இப்படி நடந்து கொள்வதில் வியப்பு ஒன்றும் இல்லை! எது வேண்டுமானாலும் செய்யலாம் அல்லவா சுதந்திர இந்தியாவில்? ராமாயணத்தை எரிக்கலாம். ராமபிரானையும் தேவியையும் பரிகசித்துக் கோடிக்கணக்கான மக்களின் மனம் புண்படும்படியாகச் செய்யலாம். இந்த நடவடிக்கைக்கு யாதொரு தடை உத்தரவும் இல்லை என்று கண்டு கொண்டார் அல்லவா? எனவே, இப்பொழுது இப்படியொரு வெறி ஆட்டத்தில் ஏன் இறங்க மாட்டார் அவர்?

விநாயகரை உடைப்பார். நகரத்து நடுவே கண்ணனையும் உடைப்பார். “நான் என்னுடைய கைப் பணத்தைச் செலவழித்து வாங்கிய சிலையை நானே ஏன் உடைக்கக் கூடாது?” என்று கேட்பார். “உடைமை யுரிமை எனக்கும் உண்டல்லவா!” என்பார்! மற்றவர்களுக்குத்தான் உணர்ச்சியுரிமை, பக்தியுரிமை, பூஜிக்கும் உரிமை, பாபத்தை எதிர்க்கும் உரிமை ஒன்றும் கிடையாது என்று சொல்வார்! வெறியாட்டக்காரர்களுக்கு ஒரு தனிச் சுதந்திரம் உண்டல்லவா? அந்தச் சுதந்திரம் இது!

ஆனால் ஒரு முக்கிய விஷயம்: விநாயகர் சிலையை உடைக்கக் கிளம்பினார். மக்களின் மனத்தில் விநாயகர் பக்தி புனர் விழிப்புக் கொண்டது. கண்ணனையும் ராமனையும் நிந்தித்தார். மக்களின் பக்திக் கனல் சுடர் விட்டுப் பிரகாசிக்க ஆரம்பித்தது. அப்படியே இப்பொழுது பெரியார் செய்ய முன் வந்துள்ள இந்த மகத்தான “சேவையின்” பலனாகத் தாயின் மணிக் கொடி ஓங்கி நிற்கும் என்றும், அதைத் ‘தாழ்ந்து பணிந்து வணங்கும்’ தேச பக்தி மும்மடங்காகச் சுடர் விடும் என்றும் எதிர்பார்க்கிறோம்.

ராஜாஜியுடைய பெயரை எடுத்து வழங்கியிருக்கிறார். அதற்காக ஒரு விஷயத்தை எடுத்துக் காட்ட வேண்டியதாகிறது. ராஜாஜி சொன்னது எந்த விஷயம், ஈ. வே. ரா. முறையிடுவது என்ன விஷயம் என்பதைக் கவனிக்க வேண்டும். ராஜாஜி சொன்னது உத்தியோகத்துக்குச் செல்லும் வாலிபர்களின் பரீட்சையைப் பற்றி. அதிலும் படித்த எல்லாப் படிப்புகளையும் எந்த மொழியில் கேள்வி கேட்டு விடை எழுதுவது என்கிற விஷயத்தைப் பற்றி. ராஜாஜி ஹிந்தி மூலம் கூடாது. அது பட்சபாதமாகும் என்றும், இவ்வளவு நாட்கள் இருந்து வந்த ஆங்கிலமும் இருக்க வேண்டும்,

இஷ்டப்பட்டவர், ஆங்கிலத்தில் பரீட்சை செய்யப்பட வேண்டும் என்றும் சொன்னார். அந்த வாதம் சரியானது என்று பிரதமமந்திரி, உள்நாட்டு மந்திரி இருவரும் பூரணமாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். உத்தியோகம் வேண்டுவோர் ஹிந்தி பயில வேண்டியது அவசியம். அந்தப் பயிற்சிக்குத் தனியாக ஒரு மொழிப் பரீட்சை மட்டும் வைத்துக் கொள்ளலாம் என்பதையும் சொன்னார். இது வெல்லாம் இந்திய அரசாங்க நிர்வாகத்தில் பட்சபாதமின்றி எல்லா மாகாணங்களின் மக்களுக்கும் சம சலுகை இருக்கவேண்டும் என்கிற நீதிப்படி வற்புறுத்திய விஷயங்கள்.

தற்போது ஈ. வே. ரா. அவர்கள் சொல்லுவது வேறு பேச்சு. பரீட்சைகளைப் பற்றியல்ல. பழைய ஹிந்தி எதிர்ப்பையும் வடக்கு தெற்கு துவேஷத்தையும் கிளப்பிக் குழப்புகிறார். அதுவுமல்லாமல் நாட்டின் கொடியைக் கொளுத்துவேன் என்கிறார். ஏன் இப்படி ஆரம்பித்திருக்கிறார் என்பது பலருக்கும் தெரியும். நாட்டுக் கொடியில் அவருக்குப் பற்று இல்லை. வெறுப்புகூட என்று சொல்லலாம்.

தமிழை ஆதரிப்பது மிக நல்ல காரியம். தமிழ் நாட்டின் தாய்மொழி தமிழ். அதைத்தான் ராஜ்ய சிம்மாசனத்தில் அமர வைக்க வேண்டும். என்னளவும் சந்தேகமே இல்லை. ஆனால் இதற்குச் சுதந்திரக் கொடியைக் கொளுத்துவது வழியாகாது. பாரத நாட்டைச் சின்னாபின்னமாக்குவது தமிழர் செய்யத்தகும் பணியல்ல. முதலுக்கே மோசமாகும். ஒரு நல்ல காரியத்தையுங் கூடப் பிழைபட்ட வழியில் செய்தால் அந்தக் காரியம் முற்றுமே பிழைபட்டுப் போகும்.

## கடன் பத்திரங்கள்

சென்னை ராஜ்யத்தில் இப்பொழுது ஏழு கோடி ரூபாய்க்குக் கடன்பத்திரங்கள் விடுக்க உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள். ஆகஸ்ட் 16-ந் தேதி முதற் கொண்டு இந்த சர்க்கார் கடன் பத்திரங்கள் வழங்கப்படும். நாலு வட்டிக்கு சர்க்கார் இந்தப் பத்திரங்களின் மூலம் மக்களிடம் கடன் வாங்குகிறார்கள். இந்த ராஜ்யத்தில் நடைபெற வேண்டிய திட்டங்களுக்கு இந்தப் பணம் உதவும். முன்னர் சென்னை ராஜ்யத்தில் எடுத்த கடன் பத்திரங்களுக்குப் பொது மக்கள் தாராளமாக உதவியதைப் போலவே இந்தக் கடனுக்கும் உதவுவார்கள் என்று நம்புகிறோம்.

★ பிரபல ★



★ திருமணம் ★

சைகோனில் பிரபல வியாபாரியும் காலஞ்சென்ற கூத்தாநல்லூர் கான்சாகிப் ஹாஜி ஜே. எம். முகம்மது இஸ்மாயில் அவர்கள் குமாரருமான ஜனாப் ஜே. எம். கரீம் அவர்களுக்கும், சென்னை அரசாங்கத்தில் கோ-ஆபரேடிவ் டிபார்ட்மெண்டில் ஸ்பெஷல் டெவலப்மெண்ட் ஆபீஸராக இருந்த காலஞ்சென்ற எம். ஹயத் அவர்களின் குமாரி ஜனாபா ஜோரா பானுவுக்கும் 21-7-55ல் சென்னை காந்தி நகரில் உள்ள மணமகள் இல்லத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

மணமக்களுக்கு உலகின் பல பாகங்களிலிருந்தும் ஏராளமான வாழ்த்துச் செய்திகள் வந்தன. காலையில் நடந்த திருமணத்திற்கும் மாலையில் எட்வர்ட் எலியட்ஸ் ரோடில் உள்ள உட்லண்ட்ஸ் ஹோட்டலில் நடைபெற்ற வரவேற்புக்கும் பல வியாபாரப் பிரமுகர்களும் அரசாங்க உத்தியோகஸ்தர்களும் விஜயம் செய்தனர். வாழ்க மணமக்கள்!




## முன்னேறுமா ?

எங்கள் பள்ளிக்கூடத்தில் பி. ஸி. ஜி. ஊசி குத்தப் போகிறார்கள். அது குத்தி ஒரு பெண்ணுக்குக் கண் குருடாகி விட்டது என்று 'கல்கி'யில் படித்தேன். அப்படிப்பட்ட ஊசி ஏன் குத்துகிறார்கள்? அப்படிக் குத்தி அவர்கள் மக்களைக் கொல்ல ஏற்பாடு செய்கிறார்களா! ராஜாஜி தாத்தா சொல்லுகிறபடி ஏன் கேட்கக் கூடாது! கேட்டால் எல்லோருக்கும் நல்லது தானே! நமது நாட்டின் வருங்காலக் குழந்தைகளாகிய எங்களைக் குருடர்களாக ஆக்கி விட்டால் நாடு எப்படி முன்னேற முடியும்!

திருநெல்வேலி 19—7—55 — ஜி. ஜயலக்ஷ்மி (வயது 7)

●

## ஒத்துழைப்பார்களா ?

எழுதப் படிக்கத் தெரிந்த தாய்மார்கள் 'கல்கி' படிப்பதினால் பி. ஸி. ஜி. ஊசி போடுவது கெடுதல் என்று தெரிந்து கொண்டு இருக்கலாம். எழுதப் படிக்கத் தெரியாத பெண்மணிகள்தான் அதிகம். அவர்களுக்கும் ராஜாஜி சொல்லும் புத்திமதிகளை எடுத்துச் சொல்ல நம்முடைய சகோதரிகள் சிலராவது முயன்றால் ராஜாஜி எடுத்துக் கொண்டிருக்கும் நல்ல காரியம் பூர்த்தியாகும். விவாகம், விவாகரத்து போன்ற விஷயங்களில் பெண்மணிகளைத் தட்டி எழுப்பும் நம்முடைய படித்த சகோதரிகள் ராஜாஜி செய்யும் இந்த நல்ல காரியத்துக்காகக் கொஞ்சம் சிரமம் எடுத்துக் கொண்டால் குழந்தைகளைப் பெற்ற தாய்மார்களுக்கு நல்லது இல்லையா! 'கல்கி' படிக்கும் தாய்மார்களாவது ராஜாஜி மேற்கொண்டிருக்கும் நல்ல காரியத்துக்கு ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

சீர்காழி 25—7—55 — எஸ். ஜெயலக்ஷ்மி

●

## தமிழில் மனு

தமிழில் தந்தி வரவேண்டும், கல்லூரிகளில் தாய்மொழி போதனை முறையாக வேண்டும், அரசாங்க பாஷை தாய்மொழியாக இருக்க வேண்டும் என்று தாங்களும், மற்றத் தமிழ்ப் பத்திரிகைகளும் வற்புறுத்தி வரும் இந்த நாளிலும் கூட, ஆங்கில வாசனையே அற்ற பாமர மக்கள், அரசாங்கத்துக்கும், அதிகாரிகளுக்கும், நீதி மன்றங்களுக்கும், ஆங்கிலத்திலேயே மனு எழுதும் வழக்கம் இருந்து வருகிறது என்றால், தங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும்.

ஆங்கிலத்தில் மனுக்கள் எழுதினால்தான், அதிகாரிகள், தங்கள் மனுக்களைக் கவனிப்பார்கள் என்னும் எண்ணத்திலேயே அவர்கள் இன்னும் இருந்து வருகிறார்கள். இந்த எண்ணத்தை நீக்க, யாரும், இதுவரை எந்தவிதமான முயற்சியும் எடுத்ததாகத் தெரியவில்லை. அதிகாரிகளும், இது விஷயமாகப் பொது மக்களுக்குப் படும்படி நடக்கவில்லை.

தாய்மொழியில்—தமிழில், மனு எழுதினால், அதிகாரிகள், மிகவும் சிரத்தையுடன் அவைகளை நன்றாகப் படித்துப் பார்த்து, தகுந்த உத்தரவுகளைப் பிறப்பிக்கத் தவற மாட்டார்கள் என்னும் எண்ணம், பாமர மக்களின் மனத்தில் பதியும்படி செய்ய வேண்டும். இதை அமைச்சர்களும், பத்திரிகைகளும், அதிகாரிகளும், தகுந்தபடி எழுதியும், வற்புறுத்தியும், சொல்லியும், தாய்மொழிக்குத் தகுந்த இடத்தைக் கொடுக்க ஆவன செய்வார்களா!

தர்மபுரி 2—7—55 — எஸ். சுந்தரம்

●

## தமிழ் நாட்டில் தமிழ் படும் பாடு!

சென்னையில் உள்ள சில கடைகளுக்கு முன்னால் தொங்கவிடப் பட்டிருக்கும் அறிவிப்புப் பலகைகளைப் பார்க்கும்பொழுது தமிழர்களாகிய நாம் வெட்கித் தலை குனிய வேண்டிய நிலை ஏற்படுகிறது. சில உதாரணங்களைக் கீழே தர விரும்புகிறேன் :—

i 'இல்லிடம் அய்ஸ் மோர் விற்கப்படும்.'

ii 'இசயம் புசபடும்.'

iii 'இங்கெ ஓட்ட ஓடசல் பித்தலை சமான் றிப்பேற் செயபடும்.'

iv 'கீ மூட்டே விற்கும் யிடம்.'

v 'வெண்ணய் காச்சின நெய் இவிடம் கிடைகும்.'

vi 'ஞாயிரு தோரும் விடுமுரை.'

இவை போன்ற எண்ணற்ற தமிழ்க் கொலைகள் தமிழ் நாட்டின் வீதியில் இன்றும் நடக்கின்றன. 'தமிழ் நாடு தமிழருக்கே', 'தமிழ் வாழ்க' என்று கூச்சல் போடுவதில் மட்டும் என்ன பயன்! அரசாங்கம் தமிழை முதன் மொழி யாக்கியதால் என்ன பயன் ஏற்பட்டிருக்கிறது!

பிழையாக எழுதிப் போடும் கடைக்காரர்கள் யாவரும் வேண்டுமென்று செய்வதில்லை. இருக்கும் பிழையைச் சுட்டிக் காட்டினால், யாரும் மறுக்காது உடனே திருத்திக் கொள்வார்கள். இக் கடைகளுக்கு லைசென்ஸ் வழங்கும் சென்னை நகரசபை அதிகாரிகளும், வெளியூர்களில் நகரசபை அல்லது பஞ்சாயத்துச் சபை அதிகாரிகளும், லைசென்ஸ்களைப் புதுப்பிக்கும் பொழுது, விளம்பரப் பலகைகளில் தென்படும் பிழைகளைத் திருத்தச் சொல்லிப் பின்பு லைசென்ஸ்களைக் கொடுக்க வேண்டும்.

சென்னை 23—7—55 — பி. வி. எஸ். வாஸன்




## 79. மந்திராலோசனை

மறுநாட் காலை எழுந்ததும் விபீஷணன் அரசனிடம் போனான். தனக்குள் விஷயத்தை மறுபடியும் நன்றாக யோசித்து முடிவு செய்து கொண்டு சென்றான். அண்ணனுடைய நன்மையைக் கருதி அவனை எப்படியாவது திருத்திக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணிச் சென்றான்.

எப்போதும் போல் ராஜமாளிகை எல்லாவித செல்வமும் லக்ஷணமும் பூஜைகளும் நிறைந்து விளங்கிற்று. ஆயுதங்களும் கவசங்களும் பூண்ட வீரர்கள், ஆபரணங்கள் பூண்ட பணிவிடை ஸ்திரீகள் எங்கே பார்த்தாலும் நின்றார்கள். பிராமணர்கள் வேத கோஷம் செய்து கொண்டிருந்தார்கள். வாத்தியக்காரர்கள் சுப்பிரபாத வாத்தியம் வாசித்துக் கொண்டிருந்தார்கள். இப்படி மங்கள நாதம் நிறைந்த ராக்ஷச வேந்தனுடைய அரமனைக்குள் விபீஷணன் மிக்க கவலையுடன் பிரவேசித்தான்.

அரசன் முன் கை கூப்பிய வண்ணம் நின்றான். முக்கிய மந்திரிகளைத் தவிர மற்றவர்களை வெளியே போகச் சொல்லி ராவணன் தன் தம்பியைப் பேசச் சொன்னான்.

"அண்ணனே! நான் சொல்லுவதில் பிசகு இருந்தால் மன்னிக்க வேண்டும். என்னுடைய லாபத்துக்காக நான் ஏதும் பேசவில்லை. உம்முடைய நன்மை ஒன்றையே கருதிப் பேசுகிறேன். நான் சொல்லுவதைக் கேட்டு ஆலோசித்துக் காரியங்களைச் செய்யக் கோருகிறேன்" என்று ஆரம்பித்தான்.

"சீதையை நீர் கொண்டு வந்தது முதற் கொண்டு லங்கா நகரத்தில் நானும் மற்றவர்களும் அபசகுனங்களையே காண்கிறோம். ஹோமாக்கினி வளர்க்கும்போது எரிய வேண்டிய முறையில் எரியவில்லை. சரியான மந்திரங்களுடன் அவி சொரிந்தாலும் அக்கினி மூள்வதில்லை. பூஜை ஸ்தலங்களில் பாம்புகள் காணப்படுகின்றன. நைவேத்தியச் சாமான்களில்



எறும்பு மொய்க்கிறது. பசுக்கள் பால் சரியாகச் சுரப்பதில்லை. யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், கோவேறு கழுதைகள் இவை ஆரோக்கியமிழந்து சரியாக உண்ணுமலும் விபரீதமாகவும் நடந்து கொள்கின்றன. வைத்தியம் பலிக்கவில்லை. காக்கைகள் நகரத்து விமானங்கள் மேல் கூட்டம் கூட்டமாக உட்கார்ந்து அவலக்ஷணமாகக் கத்துகின்றன. கழுகுகளும் வட்டமிட்டுக் கொண்டு சகுனக் குறிகள் அறிந்தவர்களுக்குக் கவலை உண்டாக்கி வருகின்றன. நரிகள் ஊருக்குள் பிரவேசித்து அகாலங்களில் ஊளையிடுகின்றன. காட்டு மிருகங்கள் நகரத்துக்குள் நடமாடுகின்றன. இவையெல்லாம் நமக்கு மிகப் பெரும் அபாயமும் நஷ்டமும் குறிக்கின்றன. இதை நாம் அலட்சியம் செய்யக் கூடாது. சீதையைத் திருப்பி அனுப்பி விடுவீர். அவளைக் கொண்டு வந்தது முதல் இந்தக் கெட்ட குறிகள் காணப் படுகின்றன. மற்றவர்களையும் விசாரித்துப் பார்ப்பீர், நான் சொல்லும் அவலக்ஷணக் குறிகள் நிகழ்ந்தது உண்மையா இல்லையா என்று. நான் சொல்லுவதை ஏற்றுக் கொள்ள முடியாது என்று தீர்மானித்தாலும் என் பேரில் கோபித்துக் கொள்ள வேண்டாம்.

"வீணுக விரோதத்தைச் சம்பாதிப்பதில் பயனில்லை. சீதையைத் திருப்பித் தந்து விட்டு சுகமாக இருப்போம்" என்று மிகப் பணிவுடன் சொன்னுன்.

"ஒரு நாளும் முடியாது! சீதையைத் திருப்பித் தரும் பேச்சுப் பேச வேண்டாம். இந்த எதிரியை நான் பெரிதாகப் பொருட்படுத்தவில்லை. நமக்கு ஒரு பயத்தையும் நான் காணவில்லை. நீ போகலாம்!" என்றுன் ராவணன்.

• • •

இவ்வாறு பிடிவாதமாக இருந்த போதிலும் சீதையைப் பற்றித் தன்னுடைய ஆசை நிறைவேறவில்லையே என்றும், நெருங்கிய உறவினர்களும் தன் காரியங்களைக் குற்றமாகக் கருதுகிறார்களே யென்றும் கண்ட ராவணன் சாந்தியை இழந்தான். ஆனல் அதைக் காட்டிக் கொள்ளாமல் மறுபடியும் சபை கூட்டினுன். காமமும் கோபமும் புத்தியை நேர் வழியில் செல்ல விடாமற் போனுலும் தான் செய்ததில் தவறு இருப்பதை உணர்ந்து மற்றவர்களோடு ஆலோசனை செய்வதில் ஒரு ஆறுதல் கண்டான்.

தங்கமயமான தேரில் ஏறித் தெருவில் சென்ருன். மிக உயர்ந்த ஜாதிக் குதிரைகள் பூட்டிய தேர். கத்தியும் கேடயமும் தரித்த வீரர்கள், கண்ணைக் கவரும் உடுப்புகள் அணிந்து முன்னும் பின்னும் இரு பக்கங்களிலும் சென்ருர்கள். சிலர் தேர், யானை,



குதிரை முதலிய வாகனங்களில் ஏறி பயங்கரமான தோமரம், கோடரி, சூலம் முதலிய ஆயுதங்களைத் தரித்து ராவணனுடைய தேருக்குப் பின்னால் சென்றார்கள். சங்கம், பேரி முதலிய போர் வாத்தியங்கள் முழங்கின. ராஜ வீதியில் லங்கேசன் பரிவாரத்துடன் இப்படி வெகு கம்பீரமாகச் சென்றபோது வழியில் நின்றவர்கள் எல்லாரும் கைகூப்பித் தலை வணங்கி நமஸ்கரித்து



வெற்றி கோஷங்கள் செய்தார்கள். திக்குகள் நடுங்கும்படி சங்கங்களும் பேரிகைகளும் கோஷிக்க ராக்ஷசேந்திரன் சபைக்குள் பிரவேசித்தான்.

தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட தூண்களும் சிறந்த விரிப்புகளும் மயனுடைய சிற்பமும் சாமர்த்தியமும் விளங்கிய அந்த மண்டபத்தில் வைடூர்ய சிம்மாசனத்தின் மேல் ராவணன் அமர்ந்தான். நாற்றுக் கணக்கான பிசாசங்கள் சபைக்குக் காவலாட்களாக நின்றன. ராக்ஷசேந்திரன் உத்தரவின்படி ராக்ஷச வீரர்கள் ஆயிரக்கணக்காக வந்து குழுமி யிருந்தார்கள். அவர்கள் வந்த வாகனங்கள் வெளியில் பெருங்கணக்காக நின்றன. அவரவர்கள் பதவிக்குத் தக்கவாறு ஆசனங்களில் உட்கார்ந்தார்கள். புரோகிதர்கள் வேதம் ஓதுபவர்கள் நூற்றுக்கணக்காக வந்து வெகுமானிக்கப்பட்டு அமர்ந்தார்கள்.

விபீஷணன், சுகன், பிரஹஸ்தன் முதலியவர்கள் ராவணேசுவரனை வணங்கி விட்டுத் தங்களுடைய ஆசனங்களில் அமர்ந்தார்கள். ஆலோசனை சபையில் நிர்வாகிகள், உத்தியோகஸ்தர்கள் எல்லாரும் வந்து கூடி யிருந்தார்கள். அவர்கள் அனைவரும் மகா நிபுணர்கள், சூரர்கள், ராவண பக்தர்கள்.

பரிமளப் பொருள்களின் வாசனை மண்டபத்தில் வீசிற்று. ஒருவருடன் ஒருவர் பேசாமல் சப்தம் அடங்கி சபை மிக கம்பீரமாக அறிவாளிகளும் மகா பலசாலிகளும், உக்ர வீரர்களும் நிறைந்து தேவேந்திரனுடைய சபைக்கு நிகராக விளங்கிற்று.

• • •

தன் ராஜ்யத்தின் க்ஷேமத்தைக் கோரினவனும் இயற்கையாகச் சிறந்த அறிவாளியுமான ராவணன் காமத்தின் வேகத்தால் மதியை இழந்தான். பெருங் கவலையிலிருந்தானானாலும் காமத்தாலும் அகங்காரத்தாலும் சரியான யோசனை செய்ய முடியாத நிலையிலிருந்தான். சபையில் கூடிய தன் பந்துக்களும் தன் நன்மையை விரும்புகிறவர்களுமான ராக்ஷஸ கூட்டத்தைப் பார்த்துச் சொன்னான்:

"எல்லா விதத்திலும் நீங்கள் திறமைசாலிகள். எந்தச் சிக்கலான விஷயத்திலும் சரியான யோசனை சொல்லும் சக்தி வாய்ந்தவர்கள். இதுவரை நீங்கள் ஆலோசித்துச் சொன்ன எந்த விஷயமும் பயன் பெறாமல் போனதேயில்லை. ஆனபடியால் உங்களை இப்போது கேட்கிறேன். நான் செய்த காரியம் உங்களுக்குத் தெரிந்ததே. தண்டகாரண்யத்தில் வசித்துக்கொண்டிருந்த ஜானகியைக் கொண்டு வந்து விட்டேன். அவள் பேரில் எனக்கு உண்டாயிருக்கும் ஆசையை நான் அடக்க முடியவில்லை. அவளை நான் திருப்பியனுப்ப முடியவே முடியாது. இப்போதும் அவள் பேரில் எனக்குள்ள விருப்பத்தை நீக்கிக்கொள்ள என்னால் முடியவில்லை. இதை நான் உங்கள் முன்னிலையில் ஒப்புக்கொள்ளுகிறேன்.

"என் விருப்பத்துக்கு அவள் சம்மதிக்க வில்லை. ராமன் வருவான், தன்னை மீட்பான் என்று நம்பி வருகிறாள். 'அவன் வர முடியாது, உன்னை அவன் அடைய முடியாது, என்னை ஒப்புக்கொண்டு சுகமாக இரு' என்று எவ்வளவோ நான் சொன்னேன். ஒரு வருஷ காலம் கெடு கேட்டாள். நானும் அதற்கு ஒப்புக் கொண்டேன். இப்போது உங்கள் யோசனையைக் கேட்கிறேன். என் இஷ்டம் பூர்த்தியாகவில்லை. சீதையைத் திருப்பி அனுப்பி விட்டு ராமனிடம் மன்னிப்புக் கேட்க என் மனம் ஒருநாளும் இசையாது. இது வரையில் நானும் வீரர்களாகிய நீங்களும் எந்த யுத்தத்திலும் தோல்வியைக் கண்டதில்லை. இந்தச் சமுத்திரத்தைத் தாண்டி ஒரு வானரன் எப்படியோ வந்து இந்த நகரத்தைச் சேதம் செய்து விட்டுத் திரும்பினான். ராமனும் வானர சேனையும் கடலைத் தாண்டி வருவது கஷ்டம். வந்தாலும் எனக்குப் பயமில்லை. நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். கடல் எதிர்க் கரையில் ராமலக்ஷ்மணர்களும் சுக்ரீவனும் அவனுடைய வானரர்களும் வந்திருக்கிறார்கள். ராமலக்ஷ்மணர்களைக் கொல்லும் உபாயம் சொல்லுங்கள்.

"நான் முந்தியே சபை கூட்டியிருப்பேன். கும்பகர்ணன் விழித்துக் கொள்ள வில்லை. அதற்காகக் காத்திருந்தேன்" என்றான்.

இவ்வாறு காமத்தால் புத்தியிழந்து; தன் கவலையை மறைத்துக் கொஞ்சம் பொய்யும் கலந்து பேசினான். சீதை ஒரு வருஷ காலம் கெடு கேட்கவில்லை. தன் கவுரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள இவ்வாறு மாற்றிச் சொன்னான்.



## பத்திரிகையாளர் மகாநாடு

சென்னையில் அகில இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் மகாநாடு ஜூலை 17, 1 தேதிகளில் வெகு சிறப்பாக நடந்தேறியது பத்திரிகையாளர் மகாநாட்டைச் சென்னை கல்வி மந்திரி திரு சி. சுப்ரமண்யம் அவர்கள் திறந்து வைத்தார்கள். மகாநாட்டுக்கு இந்தி யாவின் பல பகுதிகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்திருந்தனர். சென்னை நகரசபை மேய பிரதிநிதிகளை வரவேற்றுக் கௌரவித்தார் 'கல்கி' மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ சதாசிவம் அவர்கள் சுமார் ஐநூறு பேர் அடங்கிய பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கும், சென்னைப் பத்திரிகையாளருக்கும் மாபெரும் விருந்து சாரம் நடத்தினர்.

1. பத்திரிகைப் பிரதிநிதிகளைக் 'கல்கி' ஆசிரியர் சோமு அவர்கள் 'கல்கி' காரியா லயத்தைப் பார்வையிட அழைத்துச் செல் கிறார். 2 விருந்து நடக்கிறது 3, 4. 'கல்கி' அச்சகத்தையும், 'கல்கி' 'பிரஸைவிங்' இலா காவையும் பத்திரிகையாளர் பார்வையிடு கிறார்கள். 5. ராஜாஜி ஹாலில் நடந்த மகா நாட்டுக்கு வந்திருந்தவர்கள். 6. உழைப்









ரும் பத்திரிகையாளரை ஸ்ரீ
நாவெம் வரவேற்கிறார். 7. ஸ்ரீ
னார்விதாஸ் சதுர்வேதி இன்
னிசை விருந்துக்கும், விருந்துப
சாரத்துக்கும் நன்றி தெரிவிக்
கிறார். 8. 'கல்கி' ஆசிரியர் திரு
சோமு அவர்கள் வரவேற்புரை
கழ்த்துகிறார். 9. சென்னை
கர சபை மேயர் பத்திரிகை
யாளர்களைக் கௌரவிக்கிறார்.
0. பத்திரிகையாளர் மகாநாட்
டைக் கல்வி மந்திரி திறந்து
வைக்கிறார். 11. பத்திரிகைப்
பிரதிநிதிகள் ஸ்ரீமதி எம். எஸ்.
ின் இன்னிசையை அனுப
விக்கிறார்கள்.







# வட இந்திய

## முன்னுரை

ஒரு கணம் கண்ணை மூடிக்கொண்டால் வட இந்திய யாத்திரையில் கண்ட அதிசயமான பல இடங்களும் அற்புத நிகழ்ச்சிகளும் ஒன்றை யொன்று மோதி அடித்துக் கொண்டு முன் வந்து நிற்கின்றன.

"மன்னும் இமயமலை எங்கள் மலையே
மாநிலம் மீதுஅது போற் பிறிதிலையே!"

என்று கவியரசர் பாரதியார் நம் நாட்டின் சிறப்பு மிக்க மலையைப் பற்றிப் பாடிப் பெருமைப் பட்டாரே அந்த இமயமலையும், அதனுடைய வெள்ளிப் பனி மூடிய சிகரங்களும், அதை யொட்டிக் கோலமுறு பயன் மரங்கள் செறிந்து வாழும் குளிர் சோலைகள் குலவி மகிழ்கின்ற அதிசயமும், அந்த அற்புதக் காடுகளுக்கு மத்தியில் நீர் அமுதமெனப் பொங்கித் துள்ளிக் குதித்துக்கொண்டு ஓடும் ஆறுகளும், அந்த ஆறுகள் ஆங்காங்கு அருவிகள் போல் விழுந்து விழுந்து வரும் அழகும், நீளமான வெண் தந்தங்களையுடைய பெரிய யானைகள், அடர்ந்த ரோமங்கள் கொண்ட கரடிகள், சிறுத்தைப் புலிகள் சஞ்சரிக்கும் வனங்களும், இருநூறு அடி, முந்நூறு அடி என்று வானுற ஓங்கி வளர்ந்து நிற்கும் பலப் பல மரங்களும் கண் முன்னே வந்து காட்சி தருகின்றன. அந்தக் காட்சிகள் நம் இதயத்தில் அமுதூறுவதுபோல இன்பத்தை யல்லவா பாய்ச்சுகின்றன!

ஐந்து நதி பாயும் பஞ்சாப் நாட்டின் காட்சிகளை எப்படி வர்ணிப்பது? பாரத நாட்டையே பசி இல்லாமல் காக்கும் வல்லமை யுடைய நன்செய், புன்செய் நிலங்கள் நிறைந்த நாடு அது. அந்த நிலங்களில் எல்லாம் நீர் அமுதம்போல் பாய்ந்து பொன்னும் மணியும் கொழிக்கும் சுவர்க்க பூமியாக மாற்றுவதற்கு நம் சுதந்திர சர்க்கார் வகுத்திருக்கும் திட்டங்களைப் பற்றி நினைக்கும்போது இதயம் இன்பத்தால் விம்முகிறது. பெரிய பெரிய அணைத் திட்டங்கள் என்ன! உலகமே கண்டு வியக்கும் புதிய புதிய கால்வாய்கள் என்ன! பயங்கரக்

# யாத்திரை

மணியம்

கொள்ளைக் கூட்டத்தார் பதுங்கி வாழ்ந்த காடுகளை அழித்துக் கதலியும் செந்நெல்லும் வளர்ந்து குலுங்கும் உன்னத பூமியாக மாற்றி வரும் ராட்சத வேலைகள் என்ன! உலகிலேயே பெரிய அணை கட்டும் அபார முயற்சி என்ன! சாரதா நதியில், சட்லஜ் ஆற்றில், கங்கை நதியில் அமைத்து வரும் ஜல மின்சார நிலையங்கள் என்ன! புத்தம் புதிய சாலைகள் என்ன! ஆஸ்பத்திரிகள்; கலாசாலைகள்; ஆராய்ச்சிக் கழகங்கள் என்ன! அடாடா! சுதந்திரம் பெற்ற பயன் அல்லவா இவைகள் எல்லாம் என்று உணர்ந்து கம்பீரமாக நிமிர்ந்து நடக்கும்படியாக இருக்கின்றன.

சொர்க்கம், சுவர்க்கம் என்று சொல்லுகிறார்களே அதுதான் காஷ்மீரம். அந்தப் பூமியில் கால் எடுத்து வைத்தவுடனேயே இதயத்தில் ஏதோ சபலம் தட்ட ஆரம்பித்து விடுகிறது. அதன்மீது மோகமே உண்டாகி விடுகிறது. காஷ்மீரத்தை அப்படியே அணைத்துத் தழுவிக் கொண்டு நிற்கிறது இமயமலை. யாராவது தன்னுடைய மோக பூமியைக் கவர்ந்து சென்று விடுவார்களோ என்று இமயமலைக்குப் பயம் போலும்! அந்தக் காதல் பூமியின் பசுமையான மலைச் சாரலும், பூத்துக் குலுங்கும் நந்தவனங்களும், ஓடி விளையாடும் கலைகளும், ஓங்கி வளர்ந்து நிற்கும் தேவதாரு மரங்கள், செனூர் மரங்கள், சீடு மரங்கள், பாம்பிளாஸ் மரங்கள் முதலியவைகள் கூட்டம் கூட்டமாகக் கூடிக் குலவி நிற்கும் ஒய்யாரமும், ஆடி வரும் ஜீலம் நதியும், அந்த நதியில் மிதக்கும் படகு வீடுகளும், சமுத்திரம் போன்ற பெரிய தால் ஏரியும், அதில் பூத்துக் குலுங்கும் செந்தாமரை மலர்களும் அப்படியே நம்மை மயக்கி விடுகின்றன. நம்மை யறியாமலே நாம் காஷ்மீரத்தின் எழில்மிக்க இயற்கை வனப்பில் சொக்கி அடிமையாகி விடுகிறோம்.

** ** **

இந்தியாவை இதுவரையில் இமயமலை காப்பாற்றி வந்தது. ஆனால் இப்போது நிலைமை மாறிப் போய் விட்டது. இமயமலையை நாம் காப்பாற்றும் காலம் வந்து விட்டது. நமது நாட்டின் சுதந்திரத்தைக் காப்பாற்ற வேண்டுமானால் நாம் இமயமலையைக் காப்பாற்ற வேண்டும். எதிரிகள் கையில் இமயமலை சிக்காமல் பாதுகாக்க வேண்டும். இந்த உன்னதத் திருப்பணியில், புனித சேவையில், வீரவாழ்க்கையில் நமது தென் இந்திய வீரர்கள் திறமையுடன் ஈடுபட்டு உழைத்து வருகிறார்கள்.

இமயமலை என்ன சாதாரண மலையா! அதன் சிகரங்கள் என்ன கற்பனை செய்து காணும் சிகரங்களா! ஏழாயிரம், எட்டாயிரம்,



பத்தாயிரம், பன்னிரண்டாயிரம் என்று உயர்ந்து கொண்டே போகின்றன. அந்த உயரமான சிகரங்கள் வருஷம் முழுவதும் பனி மூடியே இருக்கின்றன. பனியின் குளிர்ச்சியை நினைத்தாலே பயங்கரமாக இருக்கிறது. எலும்புக்குள் புகுந்து குளிர் படுத்தும் வேதனையை எழுத்திலே காட்ட முடியாது. அந்தப் பயங்கர இடத்திலே நமது தமிழ்



நாட்டு வீரர்கள் இரவு பகல் இருபத்துநாலு மணி நேரமும் இருந்து கண்ணும் கருத்துமாகக் காவல் புரிந்து வருகின்றனர்.

இந்த இடங்களுக் கெல்லாம் சென்று பார்த்தபோது நமது சுதந்திர சைன்யத்தின் சேவையை நினைத்துப் பெருமைப்பட்டோம்.

இமயமலையின் உச்சியில் உள்ள நமது செந்தமிழ் நாட்டு வீரர்கள் தங்கள் சொந்தப் பத்திரிகையான 'கல்கி'ப் பத்திரிகையின் பிரதிநிதியை ஆர்வத்துடன் வரவேற்றார்கள். இமயமலையின் சிகரத்திலேயிருந்துகொண்டு அவர்கள் 'கல்கி'ப் பத்திரிகையைப் பாராட்டினார்கள். அவர்களைவிட உயர்வாக இனிமேல் யார் பாராட்டப் போகிறார்கள்! பத்தாயிரம் அடி உயரத்தில் இருந்தல்லவா பாராட்டினார்கள்!

அங்கு தமிழ் வீரர்கள் பலருடன் பேசிக் கொண்டிருந்த விஷயங்கள் நினைவுக்கு வருகின்றன. அவர்கள் தங்கள் ஊர்ப் பேச்சை எடுத்ததுமே சந்தோஷப் பட்டார்கள். இமயமலையின் உயரத்திலே 'கலகல' வென்று தமிழ் சிரிப்பொலி கேட்பதைக் கேட்டு மகிழ்ந்தார்கள். அமிழ்தினும் இனிய தமிழிலே பேசிப் பேசி மகிழ்ந்தார்கள். யுத்த முனையில் உள்ள வீரர்கள், அதிலும் பயங்கரச் சண்டை நடந்து வரும் இடத்தில் இருக்கும் சிப்பாய்கள் தங்கள் கையிலிருக்கும் துப்பாக்கியை மறந்து, யுத்தம் செய்துவிட்ட — செய்து வருகின்ற பயங்கரங்களை மறந்து சந்தோஷப்படுவது சாதாரணமாக நிகழக் கூடிய சம்பவங்களா!

** ** **

தமிழ் வீரர்களும் கேரள வீரர்களும் ஆந்திர வீரர்களும் மற்ற நாட்டு வீரர்களும் எங்களிடம் காட்டிய அபிமானம் இருக்கட்டும். பண்டித ஜவாஹர்லால் நேரு இருந்து ஆட்சி புரியும் பாரத நாட்டின் சுதந்திரத் தலைநகரமான புது தில்லியில் வாழும் அறிவும் அநுபவமும் நிறைந்த தமிழ் மக்களிடம்கூட அல்லவா அத்தகைய பாக்கியம் கிடைத்தது! புதுதில்லி தென் இந்தியக் கழகத்தாரும், தமிழ்ச் சங்கத்தாரும் தங்கள் பத்திரிகையின் பிரதிநிதியை உபசரிப்பதில் எத்தனை ஆர்வம் காட்டினார்கள்.

பாரத நாட்டின் மிகப் பெரிய நகரமான பம்பாய் நகரத்துத் தமிழ் மக்கள் காட்டிய அபிமானத்தை என்னவென்று சொல்வது! பம்பாய்த் தமிழ்ச் சங்கமும், பாரதிகலா மன்றமும், இளைஞர் முன்னேற்றக் கழகமும் நாடகக் கலைக் குழுவும் தங்கள் பத்திரிகையின் பிரதிநிதியை வரவேற்றுப்போட்டிபோட்டுக்கொண்டல்லவா உபசரித்தார்கள். இரவு பதினொரு மணி ஆனதைக்கூட இலட்சியம் செய்யாமல் மலர் மாலைகளுடன் கூட்டமாக ரயிலடிக்கு வந்து வழியனுப்பி வைத்த அவர்கள் பெருந்தன்மையைப் பற்றிச் சொல்வதா! அவர்கள் தமிழ்ப் பற்றையும் தாராளத்தையும் ரஸிகத் தன்மையையும் பற்றிச் சொல்வதா! ஒன்றும் புரியவில்லையே! சென்னை நகரத்துக்குத் திரும்பி வந்த பிறகும்கூட அவர்களது அன்பு தடுமாற வைத்துக் கொண்டிருக்கிறது!

அது இந்தக் கட்டுரையையும் முறையாக எழுத முடியாமல் திணற அடித்துக் கொண்டிருக்கிறது; பிரயாண முடிவுக்கே வரும்படி செய்து விட்டது. இதோ ஆரம்பத்திலிருந்தே கதையை ஆரம்பித்து விடுகிறேன்.

## வழியனுப்பு உபசாரம்

நான் வட இந்தியப் பிரயாணம் செய்யப் போகும் செய்தி கேட்டதும் பல நண்பர்கள் வந்து என்னைப் பாராட்டத் தொடங்கினார்கள். அவர்கள் பாராட்டும் போதெல்லாம் அந்தப் பாராட்டுதலை என்னால் ஏற்றுக் கொள்ள முடிவதில்லை. அதை வெளியில் காட்டிக் கொள்ளவும் முடிவதில்லை. அந்தப் பாராட்டுதலை அப்படியே எங்கள் ஆசிரியர் திரு சோமு அவர்களுக்கு மானசீகமாக வழங்கி விடுவேன். ஏனென்றால் சென்ற மே மாதம் முதல் வாரத்தில் ஒரு நாள் 'கல்கி' ஆசிரியர் திரு சோமு அவர்கள் என்னைக் கூப்பிட்டு அனுப்பினார்.

அவர் அறைக்குச் சென்றேன்.

"உட்கார்" என்றார்.

அவருக்கு எதிரில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்தேன்.

"உனக்கு ஹிந்தி பேசத் தெரியாது இல்லையா!" என்று கேட்டார்.

எனக்கு ஹிந்தி பேசத் தெரியாத விஷயம் இவருக்கு எப்படியோ தெரிந்து விட்டதே என்று அதிசயித்தேன்.

"ஹிந்தி தெரியாவிட்டால் பாதகமில்லை. 'டிம்பக்டு'வுக்கு அனுப்பி வைத்தாலும் போய் ஜமாய்த்து விடுவாய் என்று எனக்குத் தெரியும்" என்றார்.

'அடாடா! எங்கேயோ அனுப்பப் போகிறார் போலிருக்கிறதே! எங்கே என்று தெரியவில்லையே!' என்று சிந்தனை செய்தேன்.

"இந்திய சர்க்கார் ஐந்தாண்டு திட்டத்தில் பல அற்புத சாதனைகள் செய்திருக்கிறார்கள். முக்கியமாக வட இந்தியாவில் அவர்கள் பல அணைகள் கட்டியிருக்கிறார்கள். மின்சார உற்பத்தி நிலையங்கள் அமைத்திருக்கிறார்கள். அவைகளைப் பார்ப்பதற்காக நமது காரியாலயத்திலிருந்து உன்னை அனுப்ப உத்தேசம். போய்ப் பார்த்து விட்டு வந்தால் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம். அவற்றை நம் மக்களுக்குச் சொல்லலாம்" என்றார்.

வட இந்தியாவில் அப்பொழுதெல்லாம் 110, 112 டிகிரிக்குக் குறைந்து வெய்யில் கிடையாது என்பதை ஒவ்வொரு நாள் தினப்பத்

கிளைகளிலும் பார்த்து வந்தேன். எனக்கு மிகவும் பயமாக இருந்தது. அத்துடன் ஹிந்தி பாஷையும் பேச வராது. எல்லாமாகச் சேர்ந்து எனக்குத் தலையைச் சுற்ற ஆரம்பித்து விட்டது. இருந்தாலும் ஒரு மாதிரி சமாளித்துக் கொண்டு "ஆகட்டும், போய் வருகிறேன்" என்று தலையை ஆட்டினேன்.

** ** **

ஜூன் மாதம்; பன்னிரண்டாம் தேதி காலை கிராண்ட் டிரங் எக்ஸ்பிரஸ் வண்டியில் வட இந்தியப் பிரயாணத்தைத் தொடங்கினேன். என்னோடு சென்னையிலிருந்து இன்னும் இரண்டு பத்திரிகை நிருபர்களும் வந்தார்கள்.

வட இந்தியாவுக்குப் போய் அங்கேயே தங்கி விடுவோமோ என்னவோ என்று ஏராளமான நண்பர்கள் வந்து வழி அனுப்பி வைத்தார்கள்; மாலைகள் சூட்டினார்கள். "சந்தோஷமாகப் பிரயாணம் செய்யுங்கள்" என்று வாழ்த்தினார்கள். கிராண்டிரங் எக்ஸ்பிரஸ் வண்டியும் நீளமாக ஊதிக் கொண்டு சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து கிளம்பியது.

கிளம்பிச் சில கஜ தூரம் சென்றவுடன் 'தடார்' என்று ஒரு குலுங்குக் குலுங்கி வண்டி நின்று விட்டது. "இன்ஜினுக்கு ஏதாவது கோளாறோ!" என்று நினைத்தேன். நினைத்ததோடு இல்லாமல் வாய் விட்டே சொல்லி விட்டேன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. நம்மை யெல்லாம் இழுத்துக் கொண்டு தில்லி வரையில் ஓட வேண்டாமா! அதற்காகச் சற்று நின்று 'தம்' பிடித்துக் கொள்ளுகிறது இன்ஜின்" என்று யாரோ பதில் சொன்னார்கள்.

யார் அப்படிச் சொன்னது என்று திரும்பிப் பார்த்தேன். என்னோடு பிரயாணம் செய்த ஹிந்துப் பத்திரிகை நிருபர் ஸ்ரீ எஸ். சீனிவாசனும், இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையின் தலைமை நிருபர் ஸ்ரீ வி. எஸ். கணபதி சர்மாவும் தான் அவ்வாறு சொன்னார்கள் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

'கல்கி' பத்திரிகையின் விநியோகம் இப்பொழுது அதிகரித்திருப்பதைப் பற்றியும், எங்கள் புதிய ஆசிரியரைப் பற்றியும் சர்மா அவர்கள் நீண்ட நேரம் உற்சாகமாகப் பேசிக் கொண்டு வந்தார். அது எனக்கு மிகுந்த பெருமையையும் மகிழ்ச்சியையும் தந்தது. ரயிலில் நேரம் போனதே தெரியவில்லை.

மறு நாள். பொழுது புலர்ந்தது. ரயில் ஒரு பெரிய ஸ்டேஷனில் போய் நின்றது. 'படீர்' என்று ரயில் கதவைத் திறந்து கொண்டு 'திடீர்' என்று ஒருவர் உள்ளே நுழைந்தார். அவரைப் பார்த்தவுடன் "என்ன! என்ன!" என்று எல்லாரும் கேட்டோம். ஏதோ ஒரு விசித்திரமான பெயரைச் சொல்லி "அவர் இருக்கிறாரா!" என்று கேட்டார்.

"சரியாப் போச்சு. இதற்குத் தானா இந்த கலாட்டா செய்தீர்கள்! இங்கு யாருமில்லை" என்று அவரை இறக்கி விட்டேன்.

வெளியில் ரயில் பிளாட்பாரத்தில் "வர்தா" என்று கொட்டை எழுத்தில் எழுதியிருந்தது.

அடாடா! வர்தா ஸ்டேஷன் அல்லவா! இந்த ஸ்டேஷனில் இறங்காமல் போகலாமா என்று எண்ணிக் கொண்டே என்னுடன் வந்தவர்களைப் பார்த்து "இது வர்தா ஸ்டேஷன். காந்தி மகான் வசித்த புனித கிராமத்துக்குச் செல்லும் ஸ்டேஷன்" என்று உற்சாகமாகக் கத்திக் கொண்டே வர்தா ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் இறங்கி நடக்க ஆரம்பித்தேன்.

அந்த ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் இறங்கி நடந்து போகையில் எனக்கு என்னமோ செய்தது. "இந்தப் பிளாட்பாரத்தின் வழியாகக் காந்திமகான் பல தடவைகள் நடந்து போயிருப்பார் அல்லவா! நமது தேசத் தலைவர்கள் ராஜாஜி, நேருஜி, வினோபாஜி போன்றவர்கள் எல்லாம் காந்தி மகானைப் பார்ப்பதற்கு எத்தனை முறை இந்தப் பிளாட்பாரத்துக்கு வந்திருப்பார்கள்! இந்தக் கருப்பு மண் புழுதி காந்தி மகான் மீதும் நமது அரும் பெரும் தலைவர்கள் மீதும் பட்டிருக்குமல்லவா!" என்று நினைத்த போது காந்தி மகானோடு இதுவரையில் இல்லாத ஒரு புதிய உறவு ஏற்பட்டு விட்டதாகவே எனக்குத் தோன்றியது.

பைத்தியம் பிடித்தவனைப் போல் அந்த வர்தா மண்ணை அள்ளுவதற்குக் குனிந்தேன். இதற்குள் ரயில் ஊதிவிட்டது. என்னோடு வந்தவர்கள் ரயிலில் ஏற அவசரம் அவசரமாக ஓடினார்கள். அவர்கள் கால் தடுக்கிக் கீழே விழப் பார்த்த போது அங்கு வந்த ரயில்வே கார்டு என்னைப் பிடித்துக் கொண்டார். ரயில் கதவைத் திறந்து ரயிலில் ஏற்றி விட்டார்.

"கார்டு மட்டும் என்னைப் பிடித்துக் கொண்டிராவிட்டால் வர்தா பிளாட்பாரத்துப் புழுதியில் விழுந்து புரளும் பாக்கியம் கிடைத்திருக்கும். அந்தப் பாக்கியம் கிடைக்காமல் பொல்லாத கார்டு தடுத்து நிறுத்தி விட்டார்!" என்று குறைப்பட்டுக் கொண்டேன்.

புழுதியின் புகழைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமானால் மகாகவி பாரதியார் வாழ்க்கையில் நடந்த ஒரு சிறு சம்பவத்தை நினைவுபடுத்திக் கொண்டால் போதும்.

பாரதியார் ஒரு தடவை எங்கேயோ போவதற்காக ரயிலடிக்குச் சென்று ரயில் ஏறினார். பெரும்பாலும் அவர் மெய்ம் மறந்து



பரவசநிலையில் இருப்பவராதலால் படியில் காலை வைப்பதற்குப் பதிலாகத் தவறித் தரையில் காலை வைத்து விட்டார். அது காரணமாகத் தடார் என்று ரயில் பிளாட்பாரத்தில் விழுந்து விட்டார். அருகில் இருந்தவர்கள் "ஐயோ! பாரதியார் விழுந்து விட்டாரே!" என்று அலறிப் புடைத்துக் கொண்டு தூக்க வந்தார்கள். "தூக்காதே!" என்று ஆவேசம்

வந்தவர் போல் கூவிவிட்டு அந்த மண்ணில் ஒரு தரம் நன்றாகப் புரண்டார். இதைப் பார்த்துக் கொண்டு எல்லாரும் திகைத்து நிற்கும்போது "ஆகா! இந்தப் புண்ணிய பூமியில், பாரத நாட்டின் புழுதியில் புரள்வதற்குக் கொடுத்து வைக்க வேண்டாமா! எத்தனை பெரியோர்கள்! எத்தனை மகான்கள்! எத்தனை கற்புக்கரசிகள், எவ்வளவு மகா கவிகள், கலைஞர்கள், அவதார புருஷர்கள் வாழ்ந்த தேசம். இப்படிப்பட்ட தேசத்தில் இன்னும் கொஞ்சம் புரண்டு விட்டு வருகிறேன்" என்று புரண்டாராம். இப்பொழுது தெரிகிறதல்லவா புழுதியின் மகிமை!

என்னுடைய இந்தச் சிந்தனைக்குச் சுருதி கூட்டுவது போல ரயில் சக்கரங்கள் அதிசயமான நாதத்துடன் சுழன்று கொண்டிருந்தன. 'கடக் கடக்' என்ற தண்டவாளங்களின் ஓசை காந்தி மகானின் புகழைப் பாடுவது போன்ற பிரமையை ஏற்படுத்திக் கொண்டிருந்தது.

** ** **

ஜூன் மாதத்தில் வட இந்தியாவில் வெய்யில் மிகவும் அதிகம். அதைப் போலவே வட இந்திய தேசத்தையும் ரயிலில் செல்லும் போது பார்ப்பதற்கு ரொம்பவும் கஷ்டமாகத் தான் இருக்கும். வட இந்தியாவில் ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருக்கும்போது உண்மையில் ஏதோ தண்ணீர் இல்லாத பாலைவனத்தில் பிரயாணம் செய்வதுபோல் பெரும் பாலான இடங்கள் காட்சி அளிப்பதை உணர்வோம். இரு புறத்திலும் பசுமைக் காட்சியோ, பச்சை மரங்களோ, அல்லது செடிகளோ, பச்சைப் பசேல் என்ற வயல்களோ ஒன்றையும் காண முடியாது.

ஆங்காங்கு பசுமையான இடங்கள் தென்படும். அதன் மத்தியில் விசித்திரமான குடிசை வீடுகளைக் காணலாம். ஆனால் அவைகள் குடிசைகள்தானா! அதில் மனிதர்கள் வசிக்க முடியுமா என்று எண்ணி வியக்கத் தோன்றும். அவர்கள் நிலையை எண்ணி அனுதாபத்தோடு வருந்தத் தோன்றும்.

இதைத் தவிர இன்னும் சில விநோதங்களையும் காணலாம். நம் ஊர் வயல் வெளிகளில் காணப்படுவது போல எருமைமாடு, பசுமாடு, வெள்ளாடு முதலியவைகள் ஆங்காங்கு மந்தை மந்தையாய்க் காணப்படுகின்றன. அவைகளும் எலும்பும் தோலுமாகப் பரிதாபமாகக் காட்சி தருகின்றன. ஆனால் அந்த மாடுகளை மேய்க்கும் சிறுவர்கள் தலையில் ராஜ கம்பீரமான முண்டாசும், வர்ணச் சட்டையும், காலில் பூட்சும் அணிந்து கையில் நீளமான குச்சியைச் செங்கோல் போல் ஏந்திக் கொண்டு நிற்கிறார்கள். இது ஒரு அதிசயமான காட்சி அல்லவா!

ஆக்ரா முதலிய இடங்களில் ரயில் செல்லும் போது பல இடங்களில் கூட்டம் கூட்டமாக மயில்கள் பறந்து சென்று கொண்டிருக்கும் அழகான காட்சியைப் பார்க்க முடிகிறது. ஆங்காங்கு மனிதர்கள் சர்வசாதாரணமாகக் குதிரைகளில் பிரயாணம் செய்து கொண்டிருக்கிறார்கள். ஒட்டகம் பூட்டிய வண்டிகள் ஒய்யாரமாகச் செல்லுகின்றன. இவ்வளவுக்கு மத்தியில் நமது ஊர்களில் வயல்வெளிகளில் மாடு பூட்டி உழுவதுபோல் வயலை உழுகிறார்கள். ஆனால், இந்நாட்டு மன்னர்களாகிய உழவர்கள் தலையில் முண்டாசும், காலில்

பூட்சும், உடலில் நீளநீளமான பட்டுச் சொக்காயையும் அணிந்துகொண்டு உழுகிறார்கள்.

இக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே பழங்காலத்தில் கட்டப்பட்ட பெரிய பெரிய மசூதிகள் சிதிலமாகித் தென்படுகின்றன. மூகம்மதிய மன்னர்கள் அரசாண்ட இடமோ என்று நினைத்துப் பார்க்கிறோம். இப்படியெல்லாம் நினைத்துக் கொண்டிருக்கும் போதே "தில்லி வந்துவிட்டது" "தில்லி வந்துவிட்டது" என்று சொன்னார் நண்பர்.

என்னுடைய எத்தனையோ காலத்து மனோரதம் நிறைவேறியதைப் போல் உணர்ந்து மகிழ்ந்தேன். சிறு பிராயத்தில் இந்துதேச சரித்திரத்தில் ஷாஜஹானின் செங்கோட்டையைப் பற்றியும், அவனுடைய அதிசயமான மயில் சிம்மாசனத்தைப் பற்றியும் படித்ததிலிருந்து எனக்குத் தில்லியைப் பார்க்கவேண்டும் என்ற ஆசை இருந்தது. அது மட்டுமா! அந்தச் செங்கோட்டையில் தானே சுபாஷ் சந்திர போஸின் படைத் தளபதிகளை விசாரணை செய்தார்கள்! அத்துடன் சுதந்திர பாரத நாட்டின் தலைநகரம் அல்லவா தில்லி!

இது எல்லாவற்றையும்விடப் பாரத நாட்டுக்குச் சுதந்திரம் வாங்கித் தந்த உலகம் போற்றும் காந்தி மகாத்மாவின் புனித உயிர் தில்லிமா நகரில்தானே இந்த மண்ணுலகை விட்டு விண்ணுலகை அடைந்தது.

அண்ணலின் தூய உடல் தில்லியில்தானே அக்கினிக்கு இரையாயிற்று. அதனால் அக்கினியே மாசு நீங்கிப் புனிதமானதே. அப்பேர்ப்பட்ட மகான் அடக்கம் செய்யப்பட்ட ராஜ கட்டத்தினால் டில்லிமா நகரம் புதிய புனிதம் பெற்று விட்டதல்லவா!

உலகத்துப் பேரறிஞர்கள், ராஜதந்திரிகள், அரசியல் மேதைகள் எல்லாரும் ராஜ கட்டத்துக்குச் சென்று காந்தி மகானுடைய சமாதிக்கு மலர் தூவி வழிபாடு செய்கிறார்கள். தினம் தினம் ஆயிரக் கணக்கான மக்கள் அங்கு சென்று மனச் சாந்தி பெறுகிறார்கள்.

காந்தி மகான் புது தில்லியில் கோயில் கொண்டு பாரத நாட்டின் சுதந்திரத்தைக் காப்பாற்றி வருகிறார். அந்தப் புண்ணிய மூர்த்தி கோயில் கொண்டிருக்கும் சுதந்திரத் தலைநகரைக் காண வேண்டாமா!

இதனால் எல்லாம் என் மனத்தில் இது வரையில் பொங்கி வளர்ந்து கொண்டிருந்த விருப்பம் இப்போது நிறைவேறியதாக உணர்ந்து மகிழ்ந்தேன்.

தில்லி நகரை உடனே பார்க்க முடியவில்லை. நாங்கள் அன்றே அங்கிருந்து இந்திய சர்க்கார் ஏற்பாடு செய்திருந்த வட இந்தியப் பிரயாணத்தைத் தொடங்க வேண்டியதாகி விட்டது.

தில்லி எங்கே போய்விட்டது! மீண்டும் வந்து மூலைக்கு மூலை சென்று கொஞ்சம் கொஞ்சமாக அதன் அழகையும் பெருமையையும் திரட்டி அனுபவித்தால் போகிறது!

இப்போது தில்லியை விட்டு இன்னும் வடக்கே புறப்படுவோம். அங்கெல்லாம் நாட்டின் முன்னேற்றத்துக்காக, மக்களின் நலனுக்காகச் செய்யப் பட்டிருக்கும் அரிய பெரிய காரியங்களைக் காண்போம். (தொடரும்)



## ஓவியர் " சந்திரா "

'கல்கி' அன்பர்களின் வியப்புக்கும் நன்மதிப்புக்கும் பாத்திரமாகி யிருந்த நமது ஓவியர் 'சந்திரா' சென்ற வாரம் நம்மிடையே யிருந்து மறைந்தார் என்ற செய்தியை மிக்க வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஓவியர் 'சந்திரா' குழந்தை உள்ளம் படைத்தவர். உண்மைக் கலைஞர். தம்முடைய சொந்தப் பெயரான வி. ராமச்சந்திரன் என்ற பெயரைக் காட்டாமல் "சந்திரா" என்ற நிலவுப் பெயரிலேயே சித்திரங்கள் வரைந்து வந்தார். சந்திராவைப் பலர் பெண் என்று கூட நினைத்து வந்ததுண்டு.

பொறி இயற் கல்லூரி மாணவரா யிருந்தும் சித்திரக் கலைக்குத் தொண்டாற்ற முன் வந்தார். சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன்னால் "கல்கி" பத்திரிகையில் சேர்ந்து ஓவியங்கள் தீட்ட ஆரம்பித்தார். ஆரம்பித்த சில காலத்துக்குள்ளாகவே தமிழ் மக்கள் எங்கெல்லாம் குடியிருக்கிறார்களோ அங்கெல்லாம் ஓவியர் சந்திராவின் சித்திரங்களைப் பார்த்து அனுபவிக்கும் ரஸிகர்கள் கூட்டம் பெருகியது.

இன்னும் எத்தனையோ விதத்தில் ஓவிய உலகுக்குச் சேவை செய்ய வேண்டிய இந்த உத்தம இளைஞர் தமது முப்பத்திரண்டாவது வயதில் மறைந்தது சித்திர உலகத்துக்கு ஒரு பெரும் நஷ்டமேயாகும். சென்ற 21௳ வியாழக்கிழமை இரவு பதினொன்றரை மணிக்குத் திருச்சி ஜில்லா ஜயங்கொண்ட சோழபுரத்தில் அவரது தமையனார் டாக்டர் டி. வி. எஸ். மணி அவர்கள் இல்லத்தில் இவ்வுலகைப் பிரிந்தார்.

சென்ற ஏப்ரல் மாதத்தில் அவருக்கு இரத்தக் கொதிப்பு நோய் ஏற்பட்டது. சிறிது காலம் ஜெனரல் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றார். சமீபத்தில் அவர் சகோதரர் அவரைச் சிகிச்சைக்காக ஜயங்கொண்ட சோழபுரம் அழைத்துச் சென்றார். எவ்வளவோ கவனமாக அவருக்கு வைத்திய உதவி அளித்தும் பொல்லாத விதி சதி செய்து விட்டது.

சந்திராவின் மறைவுக்கு மரியாதை செலுத்தும் முறையில் 'கல்கி' காரியாலயம் சென்ற 22ம் தேதி மூடப்பட்டிருந்தது. ஸ்ரீ சந்திராவின் பிரிவு குறித்து ஆற்றொணாத் துயரத்தில் வீழ்ந்துள்ள அவருடைய சகோதரர்களுக்கும், எண்ணற்ற ரஸிகர்களுக்கும் நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.




## கால்கேட்
பெர்பியூம்டு காஸ்டர்
## ஹேர் ஆயில்

எக்கானமி சைஸை
வாங்கி பணத்தை
மிச்சப் படுத்துக.

COHOA/I

---

# இந்தியன் பாங்க் லிமிடெட்

தலைமை ஆபீஸ் : மதராஸ்

★

எமது மதிப்பிற்குரிய வாடிக்கைக்காரர்களுக்கும் பொதுமக்களுக்கும் கீழ்க்கண்ட இடத்தில் எங்கள் கல்கத்தா கிளை ஆபீஸ் திறக்கப் பட்டுள்ளதென்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

## கல்கத்தா கிளை ஆபீஸ்

"கமலா பவனம்", P-8, பிராபோர்ன் ரோடு, கல்கத்தா-1

தந்தி : 'KOSHAGAR'

---

இந்தக் கிளை ஆபீஸில் வெளி நாட்டுப் பரிவர்த்தனை வியாபாரம் உள்பட சகலவிதமான பாங்கு அலுவல்களும் கவனிக்கப்படும். உலக முழுவதிலும் ஏஜண்டுகள், நிருபர்களிருக்கின்றனர்

என். கோபால அய்யர், *காரியதரிசி*




அவினாச பாபு மையைக் குடித்து விட்டுப் பாத்திரத்தை அப்பால் வைத்தார்.

அதை வைக்கும் போதே, "இதைப் பார்க்க எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. ஒரு வெள்ளைக்காரப் பெண்ணின் படத்தை உங்கள் அறையில் வைத்திருப்பதே குற்றம். அதுவும் அன்னை காளியின் படத்துக்குப் பக்கத்தில் அதை வைத்திருக்கிறீர்களே! தங்கள் நோக்கம் என்ன கவிராஜ்!" என்று கோபத்துடன் கேட்டார் அவினாச பாபு.

"அது ஒரு பெரிய கதை" என்ற பூர்வ பீடிகையுடன் விசுவநாத சக்கரவர்த்தி கவிராஜ் சொல்லத் தொடங்கினார்:

அந்த நாளில் நான் நாள் முழுதும் இந்த வைத்திய சாலையில் உட்கார்ந்திருப்பேன். ஆனால், என் வைத்தியசாலைக்கு யாருமே வர மாட்டார்கள். எனவே, வைத்தியசாலையை மூடி விட்டு, என் பழைய தொழிலான உபாத்தியைத் தொழிலில் மீண்டும் ஈடுபடலாமா என்று சிந்திக்கத் தொடங்கினேன்.

வெளியே மழை கொட்டிக் கொண்டிருந்தது. அதே சிந்தனையாக எழுந்தேன். யாதொரு காரணமுமின்றி ஜன்னல் வழியாக வெளியே எட்டிப் பார்த்தேன்.

அப்போது ஓர் ஐரோப்பிய மாது குடையுடன் என் வைத்தியசாலையை நோக்கி வந்து கொண்டிருந்தாள். மழை மிகவும் அதிகமாகி விட்டதால், அவள் என் வைத்தியசாலைக்கு எதிரில் வந்ததும் திகைத்து நின்றாள். பெருமழையானதால் குடை பிடித்துக் கொண்டிருந்தாலும் நனைவதைத் தவிர அவளுக்கு வேறு வழியில்லை. அதே சமயம் அவள் இருமிக் கொண்டும் இருந்தாள்.

நான் அதற்கு முன் எந்த வெள்ளைக்காரப் பெண்ணுடனும் பேசியதில்லை. தவிர எனக்கு ஆங்கிலம் அதிகமாகத் தெரியாது. இருந்தாலும், பெருமழையில் அவள் நின்று கொண்டிருப்பதை என்னால் பேசாமல் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. எனவே, எனக்குத் தெரிந்த அரைகுறை ஆங்கிலத்தில் உள்ளே வரும்படி அவளை அழைத்தேன்.

எனது அழைப்பை எதிர்பார்த்தவள் போல் அவள் உடனே உள்ளே வந்து விட்டாள். உள்ளே வந்ததும் அவள், ஒரு கால் ஒடிந்த நாற்காலியில் உட்காரச் சென்றாள். அவள் அதில் உட்கார்ந்ததும் கீழே விழுந்து விடுவாளோ என்று நான் பதறி விட்டேன். அது ஒடிந்த நாற்காலி என்றும் அதில் உட்கார வேண்டாம் என்றும் அரைகுறை ஆங்கிலத்தில் அவளிடம் தட்டுத் தடுமாறிக் கொண்டு சொன்னேன்.

நான் இவ்விதம் கூறியதும் அவளுக்குச் சிரிப்பு தாங்க முடியவில்லை. என் பதறலையும் நான் ஆங்கிலம் பேசும் விதத்தையும் கண்டு தான் அவள் அப்படிச் சிரித்திருக்க வேண்டும்.

பிறகு அவள், "நீங்கள் கவிராஜ் ஹரிநாதின் சீடர் அல்லவா!" என்று சுத்தமான வங்காளி பாஷையில் என்னைக் கேட்டாள். அவள் அவ்வளவு சுத்தமாக வங்காளியில் பேசுவதைக் கேட்டதும் நான் பிரமித்துப் போய் விட்டேன்.

அவள் மேலும் தொடர்ந்து, "உங்கள் பெயர் விசுவநாத சக்கரவர்த்தி கவிராஜ் அல்லவா! உங்களைப் பற்றி நான் எவ்வளவு தூரம் தெரிந்து வைத்துக் கொண்டிருக்கிறேன் என்று பாருங்கள்!" என்று கூறினாள்.

இவ்வாறு கூறிய போது அவளது முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. அவளது முகமும் புன்முறுவலும் எனக்கு வெகு காலமாகப் பழக்கப்பட்டது போல் தோன்றின. எனினும், அதற்கு முன் அவளை எங்கே பார்த்தேன் என்பது ஞாபகத்துக்கு வரவில்லை.

ஆயுர்வேத வைத்தியத்தில் அவளுக்கு மிகுந்த நம்பிக்கை உண்டு என்றும், அவளுக்கு நீண்ட காலமாக இருந்து வந்த கொடிய ஹிருதய நோயை ஒரு சமயம் கவிராஜ் ஹரிநாத் ஆச்சரியகரமாகத் தீர்த்து வைத்ததாகவும் அவள் உணர்ச்சியுடன் கூறினாள்.

"நீங்கள் அவரது சீடரானதால் உங்களைப் பார்க்க நான் அடிக்கடி வர விரும்புகிறேன்" என்று அந்த வெள்ளை மாது சொல்லி விட்டு என்னையே உற்றுப் பார்த்தாள். அவளது பார்வை என்னை என்னவோ செய்தது.

அதே சமயம் அவள் மனத்தில் ஏதோ பழைய சம்பவங்கள் தோன்றி மறைகின்றன என்பதை அவள் முகத் தோற்றத்திலிருந்து தெரிந்து கொண்டேன்.

அவளது ஜாகை சிறிது தூரத்தில்தான் இருக்கிறது என்பதும் எனக்கு அப்போது தான் தெரிய வந்தது.

மழை நின்றதும் அவள் தன் ஜாகைக்குப் புறப்பட்டாள். புறப்படுவதற்கு முன் தன் விலாசம் அச்சடிக்கப்பட்ட ஒரு சீட்டை என்னிடம் கொடுத்தாள். அதிலிருந்து அவளது பெயர் ஸ்ரீமதி நோரா காலின்ஸ் என்று தெரிந்து கொண்டேன்.

• • •

சில தினங்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலை ஸ்ரீமதி நோரா காலின்ஸின் வேலைக்காரன்




வந்தான். அவள் ஹிருதய நோயால் அவஸ்தைப் படுவதாகவும் உடனே வந்து பார்க்கும் படியும் என்னிடம் சொன்னான். அம்மாது எனக்கு முன் பணமாக ஓர் உறைக்குள் பத்து ரூபாய் நோட்டை வைத்து அனுப்பியிருந்தாள்.

நான் சிறிதும் தாமதிக்காமல் உடனே எனது சிகிச்சைப் பையை எடுத்துக் கொண்டு அவள் வீட்டுக்கு விரைந்து சென்றேன்.

நோரா காலின்ஸின் ஜாகை இரண்டு மாடிகள் உள்ளதாகும். அவ்வீடு அழகாக இருந்ததுடன் சுத்தமாகவும் இருந்தது. அவைகளில் மாட்டப்பட்டிருந்த ஏகநாதரின் வாழ்க்கைப் படங்கள் உள்ளே செல்வோரின் மனத்தைக் கவர்வதாக இருந்தன.

உள்ளே ஓர் அறையில் இருந்த அலமாரிகளில் ஏராளமான புத்தகங்கள் வரிசை வரிசையாக அடுக்கப் பட்டிருந்தன.

நான் மாடியில் ஏறி ஸ்ரீமதி காலின்ஸின் அறைக்குச் சென்றபோது, அங்கு அவள் கட்டிலில் சாய்ந்து கொண்டிருந்தாள். அவளது கண்கள் மூடியிருந்தன. அந்த அறையில் சில மருந்துப் புட்டிகள் வைக்கப்பட்டிருந்தன. அங்குமிங்கும் சில புத்தகங்களும் இருந்தன.

அந்த அறையில் இருந்த மேஜையின்மேல் அழகான அலுமினியம் 'பிரேமு'க்குள் ஓர் இளைஞரின் புகைப்படம் வைக்கப்பட்டிருந்தது. அந்த இளைஞர் ஐரோப்பிய உடையில் இருந்தாலும், அவரது முகம் அவர் ஒரு வங்காளி என்பதைப் பிரகடனப் படுத்தியது !

ஸ்ரீமதி காலின்ஸ் திடீரென்று மூர்ச்சையடைந்து விட்டதாக அவளது வேலைக்காரன் கூறினான். அவளது நரம்புக்கு உத்வேகத்தைக் கொடுக்கக் கூடிய ஒரு மருந்தை நான் அவளுக்குக் கொடுத்த சில நிமிஷ நேரத்தில் அவள் மெதுவாகக் கண்களைத் திறந்தாள்.

என்னை அவள் கூர்ந்து கவனித்தாள். அவள் என்னை ஏன் அடிக்கடி அப்படிப் பார்க்க வேண்டும்! அதே சமயம் அவள் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.

ஸ்ரீமதி காலின்ஸ் மூன்று நாலு தடவைகள் என்னையும் மேஜையிலிருந்த புகைப் படத்தையும் மாறி மாறிப் பார்த்தாள்.

திடீரென்று அவள், "உங்கள் தந்தை எப்போதாவது புனாவில் இருந்தது உண்டா !" என்று என்னைக் கேட்டாள்.

அந்த விசித்திரமான கேள்வி என்னைத் திடுக்கிடச் செய்து விட்டது.

"ஏன், தெரியாது...ஒரு வேளை அவர் இளைஞராக இருந்தபோது புனாவுக்குச் சென்றிருக்கலாம்" என்று தயக்கத்துடன் கூறினேன்.

அவளது முகத் தோற்றத்திலிருந்து, அவள் மிகுந்த சிரமத்துடன் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ள முயற்சிப்பது தெரிந்தது. அதே சமயம் அவளது முகம் வெளுத்து விட்டது. அவள் சிறிது நேரம் அந்தப் புகைப் படத்தில் லயித்து அதையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியாக அவள் ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டு என்னை ஒரு விதமாகப் பார்த்தாள்.

"நீங்கள் எனக்குச் சிகிச்சை செய்ய வந்ததற்காக மிகவும் சந்தோஷம். ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் இங்கு நீங்கள் வந்து போகச் சௌகரியப்படுமா! இந்த நிலைமையில் நீங்கள் என்னை அடிக்கடி கவனித்துக் கொண்டால் நல்லது என்று தோன்றுகிறது."

இவ்விதம் கூறிய ஸ்ரீமதி காலின்ஸ் திடீரென்று எழுந்து உட்கார்ந்தாள். உட்கார வேண்டாம் என்று நான் எவ்வளவோ தடுத்தும் அவள் கேட்கவில்லை.

"எனக்கு வேறு ஒரு நோயும் இல்லை. சிற்சில சமயங்களில் நான் இவ்விதம் மூர்ச்சையடைந்து விடுகிறேன். என் ஹிருதயத்தில் உண்டாகும் சகிக்க முடியாத வேதனையே நான் மூர்ச்சையடைவதற்குக் காரணம். எனினும், அத்தகைய நிலைமை அதிக நேரம் நீடிப்பதில்லை. சிறிது நேரத்தில் எனக்கு உடம்பு குணமடைந்து விடுகிறது......உங்களைப் பார்த்துக் கொண்டிருந்தால் எனக்கு எவ்வித

நோயும் வராது என்று தோன்றுகிறது" என்று கூறினான் காலின்ஸ்.

மீண்டும் அவள் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. மறுபடியும் அவள் தொடர்ந்து, "நீங்கள் நரேன் சென் குப்தாவுக்கு நெருங்கிய உறவினராக இருக்க வேண்டும் என்று நினைத்தேன். அவரது முகத் தோற்றத்துக்கும் உங்கள் முகத் தோற்றத்துக்கும் அவ்வளவு ஒற்றுமை இருக்கிறது" என்றாள்.

அவள் கூறிய பெயர் என் காதில் சரியாக விழாமல் இருந்திருக்கலாம் அல்லவா! "நீங்கள் குறிப்பிட்ட பெயர் என்ன!" என்று மிகுந்த ஆச்சரியத்துடன் கேட்டேன்.

இவ்விதம் நான் கேட்டதும் ஸ்ரீமதி காலின்ஸின் நிலைமை தர்மசங்கடமாகியது. அவள் அறியாமல் அந்தப் பெயரை அவள் வெளியிட்டுவிட்டாள். உடனே தான் கூறியதை அவள் மழுப்பி மறைக்க முயன்றாள்.

"இல்லை, இல்லை. நான் மனக் குழப்பத்தில் ஏதோ சொன்னேன்" என்று கூறினாள்.

இச் சந்தர்ப்பத்தில் அவிநாச பாபு இடைமறித்து, "இருங்கள், இருங்கள். நரேன் சென் குப்தாவை எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் வாசித்துக் கொண்டிருந்த நரேன் சென்குப்தா தானே! அவர் இங்கிலாந்தில் அவரது பேராசிரியரின் புதல்வி மீது காதல் கொண்டு தர்ம சங்கடமான நிலைமையில் அகப்பட்டுக் கொண்டார். அவ் விருவருக்கும் கல்யாணம் கூட நிச்சயமாகியது. ஆனால், கடைசியில் கல்யாணம் எப்படியோ தடைப்பட்டு விட்டது என்பது மாத்திரம் எனக்குத் தெரியும்" என்று கூறினார்.

அவிநாச பாபு கூறிய விவரங்கள் கவிராஜுக்கு மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்கின. அவர் மேலே பேச முடியாமல் அப்படியே திகைத்துப் போய் விட்டார்.

"சரி, சரி, கவிராஜ்! அவர்கள் கல்யாணம் தடைப்பட்டதற்குக் காரணம் எதுவாயிருந்தால் என்ன! நீங்கள் உங்கள் கதையை மேலே சொல்லுங்கள்" என்றார் அவிநாச பாபு.

* * *

கவிராஜ் மீண்டும் சொல்லத்தொடங்கினார்:

ஸ்ரீமதி காலின்ஸை நான் அடிக்கடி பார்த்து விட்டு வந்தேன். எப்போதும் சோர்ந்திருந்த அவளுக்கு என்னைக் கண்டதும் மகிழ்ச்சியும் உற்சாகமும் ஏற்படுவது போல் தோன்றின.

சில நாட்களுக்குப் பிறகு நான் இன்புளுயன்ஸா ஜுரத்தினால் படுத்த படுக்கையாக இருந்தேன். ஸ்ரீமதி காலின்ஸ் எப்படியோ என் வீட்டு விலாசத்தைத் தெரிந்து கொண்டு என்னைப் பார்க்க வந்தாள்.

என் உடல் நிலையைப் பற்றி அவள் என் மனைவியிடம் பரிவுடன் விசாரித்தது எனக்கு நன்றாகக் கேட்டது.

என் மனைவி அவளை "உள்ளே வாருங்கள்" என்று அழைத்திருந்தால் அவள் சந்தோஷத்துடன் உள்ளே வந்திருப்பாள். ஆனால், என் மனைவியின் அழைப்பின்றி அவள் உள்ளே வரத் துணியவில்லை போலும்.

என் மனைவி ஸ்ரீமதி காலின்ஸை உள்ளே அழைக்காததற்கு இரண்டு காரணங்கள் உண்டு.



ஒன்று, எங்கள் வீட்டிற்குள் உட்காருவதற்கு ஒரு நல்ல நாற்காலி கூட இல்லை. எங்களுடைய வறுமை நிலை அம்பலமாவதை என் மனைவி விரும்பவில்லை. இரண்டாவதாக, கிறிஸ்துவ சமூகத்தைச் சேர்ந்த காலின்ஸ் வீட்டுக்குள் வருவதை ஹிந்து மதத்தில் மிகுந்த பற்றுதல் கொண்ட என் மனைவி விரும்பவில்லை.

எனவே, ஸ்ரீமதி காலின்ஸ் என்னை நேரில் பார்க்காமலேயே திரும்பிச் செல்ல நேர்ந்தது.

எனக்கு ஜுரம் நின்று உடல் நிலை அபிவிருத்தியடைந்ததும் நான் ஸ்ரீமதி காலின்ஸைப் பார்க்கச் சென்றேன். அப்போது சோகம் நிறைந்த அவளது முகம் மிகவும் வெளுத்துப் போயிருந்தது. அவளது நாடியைப் பரிசோதனை செய்த பின் நான் அவளுக்கு ஏதோ மருந்து கொடுக்க ஆயத்தமானேன்.

அப்போது அவள் சொன்னாள்: "நீங்கள் கொடுக்கும் மருந்தை இனிமேல் நான் தொட மாட்டேன். ஹிந்து சமூகத்தைச் சேர்ந்த நீங்கள் கிறிஸ்துவர்களாகிய எங்களைத் தீண்டாதவர்கள் போல் கருதுகிறீர்கள். நீங்கள் கூட இத்தகைய மூட எண்ணங்களுக்கு இடம் கொடுப்பதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. நரேன் மிகுந்த தாராள மனப்பான்மையுடன் இருந்தார். நான் தயாரிக்கும் காப்பியைச் சாப்பிட அவர் ஆட்சேபித்ததே இல்லை. அவரது வீட்டிலும் எல்லோரும் தம்மைப்போல் தான் பரந்த நோக்கம் உடையவர்கள் என்று நரேன் கூறுவது வழக்கம். ஆனால் நீங்களோ நாடி பார்க்க என்னைத் தொட வேண்டியிருப்பதற்காக வீட்டுக்குச் சென்றதும் ஸ்நானம் செய்கிறீர்கள்" என்றாள் துக்கத்துடன்.

"அவ்விதம் நான் ஸ்நானம் செய்வதாக உங்களுக்கு யார் சொன்னார்கள்!" என்று வியப்புடன் கேட்டேன்.

"உங்கள் மனைவிதான். உங்கள் மனைவியிடமிருந்துதான் அந்த இரகசியத்தை நான் தெரிந்து கொண்டேன்."

"உங்களைத் தொட்டதற்காகத் தினந்தோறும் மாலையில் நான் ஸ்நானம் செய்கிறேன் என்று அவள் உங்களிடம் சொன்னாளா!"

"பாவம்! உங்கள் மனைவி குழந்தை போன்றவள். அவளுக்கு என்ன வயதாகிறது! இருபத்திரண்டு அல்லது இருபத்தி மூன்றுதான் இருக்கும். நீங்கள் மாலையில் அடிக்கடி ஸ்நானம் செய்ததால், உங்களுக்கு ஜலதோஷமும் ஜுரமும் ஏற்பட்டதாக அவள் சொன்னாள். அதிலிருந்து நான் மற்ற விஷயங்களை ஊகித்துக் கொண்டேன்" என்றாள் காலின்ஸ்.

அவள் ஊகித்தது முற்றிலும் சரியே! அதைக் கேட்டதும் எனக்கு வெட்கமாக இருந்தது. அவளுக்குச் சரியான பதில் என்ன சொல்லுவதென்றே எனக்குத் தெரியவில்லை.

"அது ஒரு வழக்கம், அவ்வளவுதான். ஒவ்வொரு மதத்திலும் இது போன்ற வழக்கங்கள் உண்டு அல்லவா! உங்களைத் தொட்ட பின் ஸ்நானம் செய்தேன் என்பதற்காக எனக்கு உங்களிடமுள்ள மதிப்பு குறைந்து விடுமா!"

நான் இவ்விதம் கூறியதைக்கேட்டதும் அவள் திடீரென்று எழுந்து உட்கார்ந்தாள்.

"உங்களுடைய மதிப்பும் மரியாதையும் எனக்குத் தேவையில்லை. நான் ஒரு ஹிந்துவை மணம் செய்து கொண்டிருந்தால்......"

இந்த வாக்கியத்தை ஸ்ரீமதி காலின்ஸ் முடிப்பதற்குள் வேலைக்காரனும் ரவரெண்ட்பானர்ஜி என்ற பிரமுகரும் உள்ளே வந்ததால், எங்களுடைய பேச்சு அத்துடன் நின்று விட்டது.

சில மாதங்களுக்குப் பிறகு எனது முதல் குழந்தையான கல்யாண் பிறந்தான்.

இதன்பின் ஸ்ரீமதி காலின்ஸ் ஐந்து வருஷ காலம் இந்த உலகில் இருந்தாள். அவள் அடிக்கடி என் வீட்டுக்கு வருவாள். அவள் ஒருநாள் கூட வெறும் கையுடன் வந்ததில்லை. குழந்தைக்கு ஏதாவது வாங்கிக் கொண்டுதான் வருவாள். பொம்மை, பலூன், விளையாட்டு மோட்டார், சிறிய இஞ்ஜின்—இவை போன்ற ஏதாவதொரு சாதனத்தை வாங்கி வருவாள்.

* * *

இருண்ட சந்தில் உள்ள மிகப் பழைய வீடு ஒன்றில்தான் நான் வசித்து வந்தேன்.

அப்படியிருந்தும் கூட ஸ்ரீமதி காலின்ஸ் என் வீட்டுக்குப் பிரதிதினமும் வரத் தவறியதில்லை. என் மனைவி குழந்தையை அவளிடமே மணிக்கணக்கில் விட்டு விட்டு, சமையல் அறைக்குள் சென்று விடுவாள்.

குழந்தை கல்யாணை உட்கார வைத்துத் தெரு வழியாகத் தள்ளிச் செல்லுவதற்காக அவள் ஒரு நாள் விலையுயர்ந்த வண்டி ஒன்றை வாங்கிக் கொண்டு வந்தாள். மற்றும் 'அந்த உடை நன்றாக இருக்கும், இந்த உடை நன்றாக இருக்கும்' என்று அடிக்கடி உயர்ந்த உடைகளும் வாங்கத் தொடங்கினாள். வண்டியில் குழந்தையை உட்கார வைத்து காலின்ஸ் தானே தள்ளிக் கொண்டு அடிக்கடி 'பார்க்' செல்லுவது வழக்கமாகியது.

கல்யாணுக்காக அவள் வரையறையின்றிப் பணம் செலவழிப்பதை ஒரு நாள் நான் ஆட்சேபித்தேன். ஆனால், என் ஆட்சேபணை அவளது செவிகளில் ஏறவேயில்லை!

ஸ்ரீமதி காலின்ஸிடமிருந்து கல்யாண் சில ஆங்கில வார்த்தைகள் கற்றுக் கொண்டான். குழந்தையிடம் அவ்வளவு அன்பு வைத்துள்ள காலின்ஸிடம் எங்களுக்கும் மிகுந்த மதிப்பும் விசுவாசமும் ஏற்படலாயின.

ஒரு நாள் காலின்ஸ் என் மனைவியைப் பார்த்து, "அருந்ததி, நீ ஒரு நாள் கூட என்னை உங்கள் வீட்டில் சாப்பிடுவதற்கு அழைக்கவில்லை. இருந்தாலும் உங்கள் வீட்டில் செய்த பட்சணத்தை நான் ருசி பார்த்து விட்டேன். கல்யாண் எனக்குக் கொடுத்தான்" என்றாள்.

நான் அன்று வீட்டுக்கு வந்ததும் ஸ்ரீமதி காலின்ஸுக்கு ஒருநாள் விருந்து வைக்க வேண்டும் என்று என் மனைவி வற்புறுத்தினாள். "நாம் அவளை முன்பே சாப்பிடுவதற்கு அழைத்திருக்க வேண்டும். அதிலும் அவளாக வலுவில் கேட்டிருக்கும் பொழுது நாம் பேசாமல் இருக்கலாமா!" என்றாள்.

ஸ்ரீமதி காலின்ஸின் களங்கமற்ற உள்ளமும் அன்பும் என் மனைவியின் மனத்தைக் கூட மாற்றி விட்டன.

மறுநாள் காலின்ஸ் என் வீட்டுக்கு வரும்போது, அவளை ஒரு நாள் எங்கள் வீட்டில் விருந்துக்கு வருமாறு அழைக்கத் தீர்மானித்தேன்.

ஆனால், மறுதினம் அவள் என் வீட்டுக்கு வரவில்லை. வெகு நேரம் சென்ற பின், கல்

யான் அவள் வீட்டுக்குத் தூக்கிச் செல்லும்படி என்னைப் பிடித்து இழுத்தான்.

அவனுடன் அவள் வீட்டுக்குச் சென்ற போது அங்கு ஒரே அமளியாக இருந்தது. ஓர் ஐரோப்பிய வைத்தியர் ஸ்ரீமதி காலின்ஸ் நிலையைப் பரிசோதனை செய்து கொண்டிருந்தார். அவள் மூர்ச்சையுற்றுப் பன்னிரண்டு மணி நேரத்துக்கு மேலாகி விட்டது என்பதைத் தெரிந்து கொண்டேன்.

காலின்ஸின் வேலைக்காரன் என்னிடம் கடிதம் ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தான். அது காலின்ஸ் எழுதிய கடிதம் என்று அவன் கூறியதும், மிகுந்த பரபரப்புடன் கைகள் நடுங்க அதைப் பிரித்து வாசித்தேன்.

"அன்பார்ந்த கவிராஜுக்கு, நான் போய் வருகிறேன். கருணையே உருவான கடவுள் உங்களுக்கு அருள் புரிவாராக! உங்கள் மதக் கொள்கைக்கு முரணில்லை எனில், நான் மாண்டபின் என்னை அடக்கம் செய்யும்போது, தங்கள் கையால் ஒரு பிடி மண்ணை என் கல்லறையில் போடுங்கள். இதுதான் உங்களிடம் எனது கடைசி வேண்டுகோள்."

அந்தப் பெண்மணியின் கடைசி விருப்பத்தை நிறைவேற்றுவதா! அல்லது நம் சமூகத்தின் பகிஷ்காரத்துக்கு ஆளாவதா! இத்தகைய தர்ம சங்கடமான ஒரு பிரச்னை எழுந்தது.

ஸ்ரீமதி காலின்ஸை அடக்கம் செய்யும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அச்சமயம் வெகு தூரத்திலிருந்து ஸ்ரீமதி காலின்ஸின் குரல் என்னை அழைப்பதுபோல் இருந்தது.

காலின்ஸ் எங்கள் மீது எவ்வளவோ அன்பு காட்டினாள். குழந்தை கல்யாண்மீது அவள் சொரிந்த அன்புக்கும் வாத்சல்யத்துக்கும் எல்லையே இல்லை. கல்யாண் மீது அவளைக் காட்டிலும் எங்களுக்கு அதிக அன்பு உண்டு என்று சொல்லும் துணிவு எங்களுக்கு இல்லை! அப்படியிருக்க, ஒரு பிடி மண் பிரமாதமான காரியமா! அவ்விதம் போடுவதன் விளைவாக என் வாழ்க்கையில் எது நேர்ந்தாலும் நேரட்டும் என்ற முடிவுக்கு வந்தேன்.

கிறிஸ்துவ மத தர்மத்தை அனுசரித்துத் துக்கத்துக்கு அறிகுறியான உடையுடன் சென்று, காலின்ஸின் கல்லறையில் ஒரு பிடி மண்ணைப் போட்டேன். அத்தகைய சந்தர்ப்பத்தில் ஒரு கிறிஸ்துவ இளைஞன் தன் தாய்க்கு என்ன வெல்லாம் செய்வானோ, அதை யெல்லாம் நான் செய்தேன்.

அதன் விளைவாக என் உறவினர்கள் என்னைப் பகிஷ்காரம் செய்தனர். எனக்குக் கடன் ஏற்பட்டு, வீட்டு வாடகையும் கொடுக்க முடியாமல் கஷ்டப்பட்டேன். பால், ரொட்டி முதலியவை வாங்கிய வகையில் சில்லறைக் கடன்காரர்கள் எங்கள் வீட்டை முற்றுகை யிடத் தொடங்கினர். எங்கள் குடும்பம் மேலும் சகிக்க முடியாத வறுமையில் ஆழ்ந்தது.

இச் சந்தர்ப்பத்தில் ஸ்ரீமதி காலின்ஸின் வக்கீலிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. காலின்ஸ் எழுதி வைத்துள்ள மரண சாஸனத்தில் அவளது தேயிலைத் தோட்டம், பங்குப் பத்திரங்கள், சணல் மில், பாங்கியில் உள்ள பெரும் தொகை முதலிய எல்லாவற்றையும் என் ஏகபோக பாத்தியத்துக்கு விட்டிருப்பதாக வக்கீல் எழுதியிருந்தார்.

அவினாசபாபு! என்னை ஏன் இப்படிப் பார்க்கிறீர்கள்! ஸ்ரீமதி காலின்ஸின் நட்பை நான் நாடியபோது அவளுக்கு இத்தனை சொத்துக்கள் உண்டு என்பது எனக்குத் தெரியாது. நான் என் தாயைச் சிறுவயதில் இழந்து விட்டேன். பல பல வருஷங்கள் கழிந்து ஸ்ரீமதி காலின்ஸின் அன்பை நான் பெற்றபோது காலின்ஸ் உருவத்தில் என் தாயே திரும்பி வந்ததாக நான் எண்ணினேன்.

எனவே, அவள் சொத்துக்களை என் சொந்தத்துக்கு வைத்துக் கொள்ள என் மனம்

இடம் கொடுக்கவில்லை. அவ்விதம் செய்வது நான் செய்த இறுதிக் கடனுக்காகத் தாயிடமிருந்து கூலி வாங்கியது போலாகும் என்று என் மனம் பதறியது. என் வறுமையை இலட்சியம் செய்யாமல் அத்தனை சொத்துக்களையும் கிறிஸ்துவ தர்ம ஸ்தாபனங்களுக்குக் கொடுத்து விட்டேன். டேராடூனில் உள்ள காலின்ஸின் பெரிய வீடு இப்போது கிறிஸ்துவ அனாதைகளின் நிலையமாக இருந்து வருகிறது.

''அப்படியானால் உங்களுக்கு உள்ள இவ்வளவு செல்வமும் சொத்துக்களும் எங்கிருந்து வந்தன!'' என்று கேட்டார் அவிநாச பாபு.

கவிராஜ் நாத் தழுதழுக்கத் தமது கதையின் இறுதிக் கட்டத்தைச் சொல்லத்தொடங்கினார்:

''ஸ்ரீமதி காலின்ஸின் படத்தைத் தவிர மற்ற சகல சொத்துக்களையும் நான் தியாகம் செய்து விட்டேன். ஆனால், அவளது படம் என் வீட்டுக்கு வந்ததிலிருந்து என் வறுமை சிறிது சிறிதாக மறையத் தொடங்கியது. வைத்தியத் தொழிலில் ஏராளமான வருமானம் கிடைக்கலாயிற்று. நான் சம்பாதித்த இவ்வளவு செல்வத்துக்கும் அந்தத் தாயின் அருள்தான் காரணம் என்பது என் நம்பிக்கை. இதை அர்த்தமற்ற மூட நம்பிக்கை என்று மற்றவர்கள் கருதலாம். ஆனால், அன்னை காளியிடம் நான் ஸ்ரீமதி காலின்ஸைக் காண்கிறேன்! ஸ்ரீமதி காலின்ஸிடம் அன்னை காளியைக் காண்கிறேன்.''

# • • • தொழில் ஸ்தாபனம் கண்ட மேதை • • •

உலகத்தில் எத்தனையோ வீர புருஷர்களைக் காணலாம்; அறிவாளிகளையும் படிப்பாளிகளையும் காணலாம்; தேசபக்தி வெறியில் தியாகம் செய்பவர்களையும் காணலாம்; திறமைசாலிகளையும் ராஜதந்திரிகளையும் பார்க்கலாம். ஆனால் தொழிலறிவும் நல்ல குணமும் படைத்த மனிதர்களைப் பார்ப்பது மட்டும் கொஞ்சம் கஷ்டமான காரியம். அம்மாதிரி மனிதர்களில் ஒருவர் பிரிந்தால் மீண்டும் அவரைப் போல் ஒருவரைப் பெறுதல் முடியுமா!

அத்தகைய நல்ல குணம் படைத்த மனிதர் ஒருவர் நமது நாளில் நம்முடன் வாழ்ந்து வந்தார். சென்னை டெக்னாலஜிக் கழகத்தை (எம். ஐ. டி.) ஸ்தாபித்தார். பல நல்ல காரியங்களுக்குத் தாராளமாகத் தானம் செய்தார். அப்பேர்ப்பட்ட உத்தமர் சென்ற 21-ஆ நம்மை விட்டகன்றார். உழைப்பைப் பற்றிப் பேசி, உழைப்பிலே உயர்ந்து, உழைப்புக்காகத் தொழில் ஸ்தாபனம் கண்ட திரு சி. ராஜம் மறைந்து விட்டார்.



விளம்பரத்தையும் அதனால் விளையக்கூடிய பலன்களையும் எதிர்பாராமல் திரு சி. ராஜம் எத்தனையோ நல்ல காரியங்களைச் செய்து வந்திருக்கிறார். பிறருடைய உதவி இல்லாமலே தம்முடைய சொந்த முயற்சியினாலேயே உன்னத நிலைக்கு உயர்ந்தவர். தேச முன்னேற்றத்துக்கான எந்த நல்ல கைங்கரியம் ஆனாலும் திரு ராஜம் அவர்களுடைய பங்கு அதில் சேராமல் இருப்பது அபூர்வம் என்று சொல்லலாம். இதெல்லாம் ஒருபுறம் இருக்க, திரு ராஜம் அவர்களுடன் பழகியவர்கள் அவருடைய நல்ல குணத்தையும், விடா முயற்சியையும், உழைப்புத் திறனையும் உணர்ந்து பாராட்டாமல் இருக்க முடியாது.

இன்றைய தினம் கும்பகோணம், நாகப்பட்டினம் முதலிய இடங்களில் இரவைப் பகலாக்கும் மின்சார வெளிச்சம் ஜகஜ்ஜோதியாக எரிந்து கொண்டிருக்கிறதல்லவா! இந்த மின்சார சப்ளைக் கார்ப்பொரேஷனை முதன் முதலில் ஆரம்பித்து நடத்தியது திரு சி. ராஜம் அவர்கள்தான். இன்னும் பல கைத்தொழில் ஸ்தாபனங்களை ஆரம்பித்துத் திறமையாக நடத்தி வெற்றி பெற்றிருக்கிறார். இவை எல்லாவற்றையும் விட 1945-ம் ஆண்டு தம் மனைவியின் ஞாபகார்த்தமாக, சென்னை குரோம்பேட்டையில் தொழில் நுட்பக் கல்லூரி ஆரம்பிப்பதற்கு (எம். ஐ. டி.) ஐந்து லக்ஷ ரூபாய் நன்கொடை வழங்கிய தாராளத்தைப் போற்றிப் புகழாமல் இருக்க முடியாது.

தாம் குடியிருந்த மாளிகை போன்ற இரண்டு வீடுகளையும் தர்மமாகக் கொடுத்து விட்டுத் தம்முடைய நல்லவென்று வெளியேறினார். அந்த வீட்டை விற்றுத் தொழிற் நுட்பக் கல்லூரி ஆரம்பிப்பதற்குப் பொருள் வழங்கினார். அவருடைய இந்த தியாகம் என்றென்றும் மறக்க முடியாதது. இம்மாதிரி ஒருவர் நம் நாட்டில் நம் ஊரில் நம் காலத்தில் இருந்தார் என்பதை நினைத்தே நாம் பெருமைப்படலாம்.

இத்தகைய உயர்ந்த குணங்களும் சீரிய நோக்கமும் படைத்த பெரியார் திரு சி. ராஜம் தமது எழுபத்துமூன்றாவது வயதில் இறைவன் திருவடி அடைந்தார். சென்ற இருபத்தோராம் தேதி காலை மயிலாப்பூரில் உள்ள அவர் இல்லத்தில் அமைதியாக இந்த உலக வாழ்வைத் துறந்தார். இத்தகைய பெரியாரின் மறைவு ஈடு செய்ய முடியாத நஷ்டம் என்பதில் ஐயமில்லை.

திரு சி. ராஜம் அவர்களின் குமாரர்களாகிய திரு சி. ஆர். ராமசாமி எம். எல். ஏ., திரு சி. ஆர். சுப்ரமண்யம் ஆகியவர்களுக்கும் அவர் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கும் நமது மனமார்ந்த அநுதாபங்கள்.

ஒவ்வொரு இரவும் அதே கதை தான். குழந்தை நிம்மதியில்லாமல் அயர்ந்து போயிருந் தான். பகலிலோ அதிலும் மோசம். தாயார் ஆத்திரப்பட்டிருந்ததில் ஆச்சரியமொன்றுமில்லை.





ஒரு நாள் அவள் அண்டை வீட்டுக்காரி யின் யோசனையைக் கேட்டாள். அவள் சொன்னாள் "குழந்தை சந்தோஷமாயும் ஆரோக்கியமாயுமிருக்க அவனுக்கு உணவு கணக்காய் புகட்ட வேண்டும்" தவிர 'க்ளாக்ஸோ'வை வாங்கும்படி அவள் வற்புறுத்திச் சொன்னாள்.

'க்ளாக்ஸோ' ஒரு புஷ்டியான பால்-உணவு உறுதியான எலும்பும் பற்களும் வளர விடமின் 'டி'யும் ரத்தத்தை வளம்பெறச் செய்ய இரும்புச் சத்தும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன.






அப்பாடா! குழந்தை எவ்வளவு விரைவில் வளர்ச்சியடைந்தான் என் பதைநீங்கள் நம்பவே மாட்டீர்கள். விரை வில் அவனுக்கு ஒரே ஆனந்தம் தான்! இரவு முழுவதும் நேர்த்தியாய் தூங்க லானான், நிதானமாய் எடையும் அதிகமாயிற்று.

**Glaxo**

'க்ளாக்ஸோ' குழந்தைகளின் மிகச் சுத்தமான பால் உணவு

D. 38




அத்தியாயம் 35

## சந்திரமணியின் கதை

நான் நடிக்க ஆரம்பித்த பிறகு அதிகமாகச் சினிமாப் படங்கள் பார்க்கத் தொடங்கினேன். ராஜாராம் ஆங்கிலப் படங்கள் பார்த்தால் நடிப்புக்கு உபயோகமான பல விஷயங்கள் தெரிந்து கொள்ளலாமென்று கூறுவார். ஆகவே நான் ஆங்கிலப் படங்கள் அதிகமாகப் பார்ப்பேன். ராஜாராம் கூறியதிலும் உண்மை இருந்தது.

இப்படிப் பல படங்கள் பார்த்துப் பார்த்து எனக்குச் சுமாராகப் பேசும் அளவுக்கு ஆங்கில ஞானம் உண்டாயிற்று. அதன் பிறகு பொழுது போகாமலிருந்த போதெல்லாம் பல ஆங்கில நாவல்கள் படித்து வந்தேன். இதனுலெல்லாம் ஸ்டுடியோவுக்கு வரும் மற்ற பாஷைக்காரர்களுடன் என்னுல் ஆங்கிலத்தில் பேசிச் சமாளிப்பதற்கு முடிந்தது.

இதைத் தவிரக் கதைகள் அதிகம் படிக்கப் படிக்க நாமும் ஒரு கதை எழுதினுல் என்ன என்று 'தோன்ற ஆரம்பித்தது. வேலை இல்லாத நேரங்களில் கதைகள் எழுதுவது பற்றி யோசிக்கலானேன். சில கதைகள் எழுதிப் பார்த்தேன். எனக்கே மறுபடியும் படித்துப் பார்க்கும் போது 'சகிக்கவில்லையே' என்று தோன்றும். கிழித்துப் போட்டு விடுவேன்.

ஒருநாள் திடீரென்று என் அன்னை சந்திரமணியையும் காசிலிங்கத்தையும் பற்றி ஒரு கதை எழுதினுல் என்ன என்று தோன்றியது. உடனே அதைக் காரியத்திலும் செய்ய ஆரம்பித்தேன். அவர்களுடைய கதையை எழுதுவதே எனக்கு ஒரு வகை இன்பத்தை அளித்து வந்தது.

பல நாட்கள் வரை எழுதுவது யாருக்கும் தெரியாது. ஒருநாள் ராஜாராம் என்னை எழுதும்போது பார்த்துவிட்டு, "என்ன எழுதுகிருய்?" என்று கேட்டுத் துளைத்து விட்டார். நான் கூறிய உடனேயே படித்துப் பார்க்கிறேன் என்று வாங்கிக் கொண்டார். படித்த பிறகு அவருக்கு ஒரே சந்தோஷம்! "இந்து! உன்னுல் இவ்வளவு

நன்றாக எழுத முடியும் என்று எனக்குத் தெரியவே தெரியாதே. இந்தக் கதையைச் சினிமா எடுத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? ஒரு சர்க்கஸ்காரனைப் பற்றி எவ்வளவு ருசிகரமாகப் படம் எடுக்கலாம்?" என்றார்.

"போதுமே! நான் அதற்காக எழுதவில்லை. ஏதோ என் தாயாரைப் பற்றி எழுத வேண்டுமென்று ஆசையாக இருந்தது. அதற்காகத்தான் இந்தக் கதையை எழுதினேன்."

"இதை நான் டைரக்டரிடம் கொடுக்கிறேன். நீ எழுதியதென்று சொல்லாமல் கொடுக்கிறேன். அவர் என்ன சொல்கிறாரென்று பார். நான் தான் பொய் சொன்னாலும் எல்லோரும் சொல்ல மாட்டார்களல்லவா?"

"கொடுத்துத்தான் பாருங்களேன்" என்று விளையாட்டாகச் சொன்னேன்.

அதை எடுத்துக் கொண்டு ராஜாராம் போய் விட்டார்.

இந்தக் கதையின் ஆரம்பத்தில் எழுதி யிருப்பதையே எழுதினேன். பெயர்களை மாற்றி யிருந்தேன். ஆனால் கடைசியில் ஈசுவர மூர்த்தி இறந்து போவதாகச் செய்திருந்தேன். மந்திர மூர்த்தியின் உதவியினால் இவர்களுக்குச் சொத்து கிடைத்து விடுவதாக எழுதியிருந்தேன். இந்தச் சிறிய மாறுதல்களுடன் கதையைச் சந்தோஷமாக முடித்திருந்தேன். கதையிலாவது அவர்கள் சந்தோஷமாக இருக்கட்டுமே என்று தோன்றியது. அவர்களுடைய ஆனந்தமான வாழ்க்கையைக் கற்பனையில் காண்பதில் எனக்கு ஒரு திருப்தி ஏற்பட்டது. ஆனால் ஒரு நாளும் அதை நன்றாக இருக்கிறதென்று யாரேனும் பாராட்டுவார்கள் என்று நான் நினைக்கவில்லை. நாம் நினைப்பது எதுதான் நடக்கிறது? நான் எழுதியதை எல்லோரும் ஒரு முகமாகப் பாராட்டும் காலம் வருமென்றோ, அல்லது அதைப் படமாக எடுப்பார்களென்றோ நான் கனவு கூடக் கண்டதில்லை.

இரண்டாவது படப் பிடிப்பு ஆரம்பித்த சில மாதங்களிலேயே இந்தக் கதை முழுவதையும் நான் எழுதி முடித்து விட்டேன்.



ராஜாராம் அதை உடனே டைரக்டர் பாஸ்கரனிடம் காட்டினாராம். அவர் அதைப் பிரமாதமாகப் புகழ்ந்தாராம். முதலாளி கதிர்வேல் அவர்களும் பாராட்டினாராம். அவர் "இந்தக் கதைக்கு உரிமையாளரிடமிருந்து இதை வாங்கி விட வேண்டும்" என்று கூறினாராம். அதன் பிறகு ராஜாராம் எழுதியது யார் என்று கூறவே அவர்கள் அசந்து போய் விட்டார்களாம்.

பாஸ்கரன் என்னிடம், "என்னால் இதை நம்பவே முடியவில்லை, விமலா! உன்னால் சினிமாவுக்கு ஏற்றதொரு கதை எழுத முடியுமென்று நான் நினைக்கவே இல்லை. இதைப் படமாக எடுத்து அதில் நீயே நடித்தாயானால் ஏற்படக் கூடிய வெற்றியைப் பற்றி நினைக்கும்போதே எனக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை" என்று கூறினார்.

"இந்தப் படத்துக்குப் பிறகு எனக்குச் சினிமாவில் நடிப்பதாக உத்தேசமில்லை" என்றேன்.

பாஸ்கரன் என்னை வியப்புடன் பார்த்தார். "என்ன விமலா சொல்கிறாய்? உன்னை வைத்துச் சினிமா உலகில் ஒரு புரட்சியே செய்ய வேண்டு

மென்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அதில் நீ மண்ணைப் போட்டு விடுவாய் போலிருக்கிறதே?''

"நீங்கள் அப்படி ஆசைப்படுகிறீர்களென்று எனக்கு இதுவரையில் தெரியவே தெரியாதே!''

"நீயே யோசித்துப் பார், விமலா! இந்தப் படம் முடிந்து மிக நன்ருக ஓடிய பிறகு, நீயே எழுதி, நீயே நடித்த படம் ஒன்று வெளிவந்தால் அது எப்படிப்பட்ட கிளர்ச்சியை உண்டாக்கும்?''

என் அன்னையின் பாத்திரத்தை ஏற்று நான் நடிக்கக் கூடும் என்ற நினைப்பே எனக்குக் கிளர்ச்சியை உண்டாக்கியது.

"இந்தப் படம் ஓடாவிட்டால் என்ன செய்வீர்கள்? அது நீங்கள் நினைப்பதுபோல் அவ்வளவு வெற்றி பெறும் என்பது என்ன நிச்சயம்?''

"இது வெற்றி யடையா விட்டாலும் உன் கதை நிச்சயமாக வெற்றி யடையும். அதில் சந்தேக மில்லை. இந்தப் படத்தின் தோல்வியே அதற்கு அடுத்த படத்தின் வெற்றிக்கு அஸ்திவாரமாக அமையும்.''

"நல்ல வேடிக்கை! நான் நடிக்க வேண்டு மென்பதற்காக என்ன காரணம் வேண்டுமானலும் நீங்கள் சொல்லத் தயாராக இருக்கிறீர்கள் போலிருக்கிறதே!'' என்று கூறிச் சிரித்தேன்.

"அது சரி! உனக்கு ஏன் நடிப்பதற்குப் பிடிக்கவில்லை?''

"நான் அப்படிச் சொல்லவில்லையே? ஆனல் நான் விலக விரும்புவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. மொத்தத்தில் எனக்கு இதில் சந்தோஷம் கிடைக்கவில்லை. நீங்கள்தான் சொல்லுங்களேன். படம் பிடித்துப் பிடித்து நீங்கள் என்ன திருப்தியைக் கண்டு விட்டீர்கள்? உங்கள் வாழ்க்கை நிறைந்து விட்டதா?'' என்று கேட்டேன்.

"எனக்கு இதில் பூரண திருப்தி கிடைக்கிறது, விமலா! பொது ஜனங்களுக்குச் சந்தோஷத்தை ஊட்டும் பணியைச் செய்கிருேம் என்ற திருப்தி



கிடைக்கத்தான் செய்கிறது. உனக்கு அப்படிப்பட்ட திருப்தி ஏற்பட வில்லையா?" என்று கேட்டார்.

"இதற்குப் பதில் சொல்ல எனக்குத் தெரியவில்லை. ஆனால் என் இதயம் நிரம்பவில்லை. இதன்மூலம் எனக்குக் கொஞ்சமும் மனச் சாந்தி கிடைக்க வில்லை" என்றேன்.

மறுநாள் ராஜாராம் என்னிடம் "டைரக்டர் பாஸ்கரனிடம் நீ என்ன சொன்னாய், இந்து?" என்று கேட்டார்.

"சினிமாவில் நடித்துப் புகழ் பெறுவதன் மூலம் எனக்கு மன அமைதி கிடைக்கவில்லை என்று சொன்னேன் போலிருக்கிறது!"

"உனக்குக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று தோன்றுகிறதாம். உன் குரலில் ஏக்கம் தொனிக்கிறதாம். அவருக்கு உள்ளம் உருகிப் போய் விட்டதாம். உனக்கு யாரை யாவது பிடித்திருக்கிறதா என்று தெரிந்து கொண்டு சீக்கிரம் ஏற்பாடுகள் செய்யச் சொன்னார்" என்று கூறிச் சிரித்தார் ராஜாராம்.

நானும் சிரித்தேன். "அவர் சொல்வது உண்மைதானே, ராஜாராம்! நீங்கள்தான் அவரைத் தேடிப் பிடிக்க மாட்டேனென்கிறீர்களே!"

"அப்படியா நினைக்கிறாய்? எனக்கு இதுவரையில் சிறிதேனும் நேரமிருந்ததா? நேற்றுத்தானே என் ஷூட்டிங் முடிந்தது? இன்னும் பத்து நாட்களுக்கு எனக்கு வேலை இல்லை. நான் குங்குமத்துறைக்கு நாளை இரவே புறப்பட்டுப்போகிறேன். அவர் அங்கு வந்தாரா என்று விசாரித்துக்கொண்டு ஒரே நாளில் திரும்பி வருகிறேன்" என்றார் ராஜாராம்.

அய்யாக் குட்டி சொன்னபடியே புறப்பட்டுச் சென்றார். உடனேயே திரும்பியும் வந்து விட்டார்.

"என்ன ஆயிற்று? குங்குமத் துறைக்கு வந்தாராமா?" என்று ஆவலுடன் கேட்டேன்.

"ஒரு தகவலும் கிடைக்கவில்லை, இந்து! அலைந்ததுதான் மிச்சம்" என்று ஏமாற்றத்துடன் கூறினார்.

"என்ன நடந்ததென்று விவரமாகச் சொல்லுங்கள்."

"நேற்றுக் காலையில் போய்ச் சேர்ந்தேன். போனவுடன் நேரே ஜமீன்தார் வீட்டுக்குத்தான் போனேன். அங்கே பழைய மானேஜர் இல்லை. புதிதாக ஒருவர் வந்திருக்கிறார். அவரைக் கண்டாலே எனக்குப் பிடிக்கவில்லை. ரொம்ப முரட்டு ஆசாமி. முகங் கொடுத்துக் கூடப் பேசவில்லை. 'ரங்கதுரை என்ற தங்கபாண்டியனின் சிநேகிதர் சீமைக்குப் போயிருந்தார். ஒருவேளை அவர் இங்கு வந்திருக்கலாமென்று தகவல் விசாரிக்க வந்தேன்' என்றேன். உடனே அவன் சீறி விழுந்தான். 'உம்மைப் போல் வருபவர்களுக்குத் தகவல் சொல்லத்தான் இங்கே ஆள் வைத்திருக்கிறார்களோ? ரங்கதுரையும் தெரியாது, மண்ணாங் கட்டியும் தெரியாது' என்றான். எனக்கு வந்த கோபத்தில் அவன் பல்லை உடைத்திருப்பேன். தங்கபாண்டியனுடைய ஆளை விரோதித்துக் கொள்ள வேண்டாமென்று உடனே புறப்பட்டு விட்டேன்.

"அதன் பிறகு நம்முடைய வீட்டுக்குப் போனேன். அது பூட்டிக் கிடந்தது. பிறகு தபாலாபீஸுக்குப் போய் விசாரித்தேன். அங்கும் ஒருவருக்கும் தகவல் தெரியவில்லை. எனக்கு ஒரே ஏமாற்றமாக இருந்தது. குடியானத் தெருவில் விசாரித்தேன். அவர்களுக்கும் தெரியவில்லை. குடியானத் தெருவில் உன்னைப் பற்றி ரொம்பப்பேர் விசாரித்தார்கள், இந்து. அந்த ஏழை ஜனங்கள் உன்னைப் பற்றி மிகவும் அன்புடன் பேசினார்கள். அப்போது நான் நீயாக இருக்கக் கூடாதா என்று கூட எண்ணினேன்."

"அது சரி! திருநந்திபுரத்தில் சின்னக் கறுப்பன் செட்டியார் வீட்டில் விசாரித்தீர்களோ?"

"அவசரப்படாதே. குடியானத் தெருவில் வேலப்பன் 'இந்த ஊருக்கு இப்போது வருவோர் போவோர் அதிகமாகி விட்டார்கள், சாமி. கூட்டும் கோட்டும் போட்டுக் கொண்டு மாதத்துக்கு நாலைந்து பேர் வருகிறார்கள். நீங்கள் சொல்லும் ஆசாமி வந்ததாகத் தெரியவில்லை. சின்ன ஜமீன்தாரோடு செவலையா ஒருத்தர் முன்னே வந்தாரே, அவரைத்தானே சொல்கிறீங்க? அவர் வந்ததாகத் தெரியவில்லை, சாமி!' என்றான்.

"அதன்பிறகு எனக்கு என்னசெய்வதென்று தெரியவில்லை. ஹோட்டலில் சாப்பிட்டு விட்டு மலைச் சாரலுக்குப் போனேன். மலைமேல் ஏறிச் சென்றால் என்ன என்று தோன்றியது. ஒரு வேளை உன் தந்தையைப் பார்க்கலாம். பார்த்தால் நீ செளக்கியமாக இருப்பதைத் தெரிவிக்கலாம் என்று எண்ணிக் கொண்டே ஏறினேன். வெகு நேரம் ஏறிச் சென்றும் ஒருவரையும் காணவில்லை. பிறகு நான் வந்திருப்பது அவருக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்? எதற்கும் ஊமையன் கோட்டை வரையில் ஏறிப் பார்த்து விடுவது என்று நினைத்துக் கொண்டு கோட்டையை நோக்கிப் போனேன்.

"ஊமையன் கோட்டையைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்ததெல்லாம் நினைவுக்கு வந்து பயமாக இருந்தது. ஆனாலும் உன் தந்தை காசிலிங்கம் அந்தப் பிராந்தியத்தில் இருக்க வேண்டுமானால் அந்தக் கோட்டையைத் தவிர வேறு இடமில்லை.

"அவர் அங்குதான் இருக்க வேண்டுமென்ற நினைப்பு கொஞ்சம் தைரியமளித்தது. ஆனால் நான் அவ்வளவு சிரமப்பட்டு ஏறியும் பிரயோசனமில்லாமல் போயிற்று. ஊமையன் கோட்டை பாழடைந்து பார்ப்பதற்குப் பரிதாபகரமான தோற்றமளித்தது. திக்திக் கென்று அடித்துக்கொள்ளும் மனத்துடன் அந்தக் கோட்டையைச் சுற்றிச் சுற்றி வந்தேன். ஆனால் யாரையும் காணவில்லை. ஒரு மரத்தடியில் நாலு கற்களை வைத்து அடுப்பாக உபயோகப்படுத்தப் பட்டிருந்த அடையாளம் தெரிந்தது. ஒரு வேளை காசிலிங்கமே இங்கு சமைத்துச் சாப்பிட்டிருக்கலாமென்று தோன்றிற்று.

"அதைப் பார்த்ததும் எனக்கு ரொம்ப வருத்தமாக இருந்தது. 'நம்முடன் அவர் வந்து இருந்து விட்டால் என்ன? எதற்காக இப்படிக் கஷ்டப்பட வேண்டும்? ஒளிந்து மறைபவனைத்தான் தேடுவார்கள். கண் எதிரில் இருப்பது யாருக்கும் தெரியாது!' என்று எண்ணமிட்டேன். இருள் சூழ்ந்து வரவே மலையிலிருந்து வேகமாக இறங்கி வந்தேன்.

"உடனே திருநந்தி புரத்துக்குச் சென்றேன். சின்னக் கருப்பன் செட்டியாருக்கும் ஒன்றும் தகவல் தெரியவில்லை. ஆகவே நேரே ஸ்டேஷனுக்குப் போய் இரவு பதினோரு மணிக்கு ரயிலேறி இங்கு வந்து சேர்ந்தேன்" என்று கூறி முடித்தார்.

## அத்தியாயம் 36

# எண்ணங்கள் சிதறின

ராஜாராம் சொன்ன விஷயங்கள் எனக்கு எந்த விதமான உணர்ச்சிகளைத் தூண்டின என்று விவரிக்க முடியாது. அப்பாவைப் பற்றிய விவரங்களைக் கேட்டதனால் அவர் மீது பச்சாதாப உணர்ச்சியும் பரிவும் பொங்கி எழுந்தன. 'அவர் என்னோடு வந்து இருந்துவிடக்கூடாதா? எனக்கு எப்பேர்ப்பட்ட பலமாக இருக்கும்? அவருக்குப் பணிவிடைகள் செய்தால் எவ்வளவு சந்தோஷமாக இருக்கும்? பாவம்! உடம்புக்கு வந்தால் அவரை யார் கவனிப்பார்கள்?' என்றெல்லாம் தோன்றின. அப்பாவைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் உள்ளத்தின் அடிவாரத்திலிருந்துபொங்கிஎழுந்தது.

அதே சமயத்தில் ரங்கதுரையைப் பற்றித் தகவல் ஒன்றும் கிடைக்கவில்லை என்பதனால் விவரிக்க ஒண்ணாத சோர்வு உடலெல்லாம் பரவியது. ஒருவாறு நான் எதிர்பார்த்திருந்த போதிலும் அது எனக்கு ஏமாற்றத்தைத்தான் அளித்தது.

நான் ஸ்டுடியோவுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தேன். ஒரு நாளாவது நான் நேரந் தவறிச் சென்றதே இல்லை. நான்தான் மற்றவர்களுக்காகக் காத்திருப்பது வழக்கம். இன்று என்னால் நின்ற இடத்தை விட்டு நகர முடியாதென்று தோன்றியது.

ராஜாராம் ரங்கதுரையைப் பற்றி ஒரு தகவலும் கொண்டு வரவில்லை. தங்க பாண்டியனுடைய விலாசம் கூடக் கொண்டு வரவில்லை. "ஐயோ! அவர் இருக்குமிடம் தெரிந்து கொள்வதற்கு முடியாது போயிருக்கிறதே. அவர் சீமையிலிருந்து வந்து விட்டாரா இல்லையா என்பதையே

தெரிந்து கொள்ள முடியாது என்று தோன்றுகிறதே" என்று நினைத்தவுடனேயே என்னால் நிற்க முடியவில்லை. தட்டுத் தடுமாறிக் கொண்டு என் அறைக்குச் சென்று படுக்கையில் விழுந்தேன். அழவும் முடியாத அளவுக்கு உடல் சோர்ந்து போயிற்று. எத்தனை சோர்வாக இருந்தாலும் மனம் மாத்திரம் வேலை செய்து கொண்டேதான் இருக்கிறது. வாளியில் குழாயிலிருந்து ஜலம் விழும் போது அடியிலிருந்து குமிழிகள் எழும்பி மேலே வந்து வாளியின் ஓரம் வரை ஓடிச் சென்று உடையுமே. அந்த மாதிரி என் மன அடிவாரத்திலிருந்து எண்ணங்கள் கொப்புளித்து நாலா புறமும் சிதறி வெடித்தன.



ரங்கதுரையை முதன் முதலில் காரில் பார்த்தது, பிறகு அவர் சரித்திர ஆராய்ச்சி விஷயமாக விசாரிக்க வந்தது, என்னை 'அஜந்தா சித்திர'மென்று கூறியது, "ஸ்வர்ண முகி" என்று அழைத்தது, பாதிரித் தோட்டத்தில் பாட்டுக் கற்றுக் கொடுத்தது, அம்மாவிடம் வாக்குறுதி அளித்தது, அவர் எழுதிய கடிதம் எல்லாம் ஒன்றன் மேல் ஒன்றாக மோதிக் கொண்டு மனக் கண்முன் தோன்றின. கடிதத்தைப் பற்றிய நினைவு வந்ததும், எழுந்திருந்து பெட்டியைத் திறந்து அந்தக் கடிதத்தை எடுத்தேன். அதைத் தொட்ட உடனேயே உடலெல்லாம் புல்லரித்தது. கடிதத்தைப் பிரித்துப் படித்தேன். "ஆகா! இப்படி அன்பில் தோய்த்துக் கடிதம் எழுதியவர்தானா என்னை அடியோடு மறந்திருக்கிறார்? இது அவர் எழுதியதுதானா? நான் இந்துமதிதானா? ஒரு வேளை அதெல்லாம் பூர்வ ஜன்மத்து நினைவுகளோ? இந்த ஜன்மத்தில் நினைவுக்கு வந்து என்னை இப்படித் தாங்க முடியாத வேதனைக்குள்ளாக்குகிறதோ? இது என்ன சோதனை? நான் என்ன பாவம் செய்தேன்? ஒரு வேளை யுத்தத்தில் குண்டு வீச்சின் போது......" இப்படி எண்ணிக் கொண்டே எழுந்து நின்றேன். உலகமே என் கண் முன்னால் சுழல்வது போலிருந்தது.

அதன் பிறகு நான் இந்த உலகத்துக்கு வந்தபோது ஒரு டாக்டரும், முனிசாமி கவுண்டரும், டைரக்டரும், ராஜாராமும் என் அருகில் நின்று கொண்டிருந்தார்கள். டாக்டர் எதற்கு வந்திருக்கிறார் என்று எனக்குப் புரியவில்லை. கவுண்டர் ஆதரவுடன் என்னைப் பார்த்து, "என்னம்மா செய்கிறது? இப்போது எப்படி இருக்கிறது?" என்று கேட்டார். அதன் பிறகுதான் நான் கடிதத்தை எடுத்துப் படித்ததும், அதற்கு முன்னால் ராஜாராம் சொன்ன விஷயங்களும் நினைவுக்கு வந்தன. "அட கடவுளே! ஷூட்டிங்குக்கு நாழிகையாகி விட்டதே. அதுதான் டைரக்டர் வந்திருக்கிறார்?" என்று எண்ணிக் கொண்டே எழுந்து உட்கார்ந்தேன்.

"நீ படுத்துக் கொள், விமலா! அலட்டிக் கொள்ளாதே" என்று பாஸ்கரன் கூறினார். அதன் பிறகுதான் எனக்கு உடம்பு சரியில்லை என்று எனக்குப் புரிந்தது. தலைசுற்றி விழுந்து விட்டேன் என்பதும் தெரிந்தது.

டாக்டர், பாஸ்கரனிடம் விடை பெற்றுக் கொண்டு போய்விட்டார். பாஸ்கரன் மருந்துச் சீட்டைக் கார் டிரைவரிடம் கொடுத்து உடனே மருந்து வாங்கி வரச் சொன்னார்.

"ஏன் இப்படித் தடபுடல் செய்கிறீர்கள்? எனக்கு உடம்பு சரியாகத்தான் இருக்கிறது. நேற்றிரவு சாப்பிடவில்லை. அதனால் சற்றுப் பலஹீனமாக இருந்திருக்கிறேன். வேறொன்றும் இல்லை. ஸ்டுடியோவுக்குப் போகலாமே? நேரமாகி விட்டதுபோலிருக்கிறதே?" என்று கூறினேன்.

ராஜாராம், "பேசாமல் படுத்துக் கொண்டிருக்கா விட்டால் எனக்குக் கோபம் வரும்" என்று அதட்டினார்.

நான் சுற்றிலும் கவலையுடன் பார்த்தேன். 'கடிதம் எங்கே' என்று திடு

ரென்று ஞாபகம் வந்தது. ராஜாராம் அதைக் கவனித்து விட்டு, "எல்லாம் ஜாக்கிரதையாக இருக்கிறது. நீ எதற்கும் கவலைப்பட வேண்டாம்" என்று கூறினார். என்னுடைய மனமும் நிம்மதி அடைந்தது.

நான் பாஸ்கரனைப் பார்த்து, "என்னால் உங்களுக்கு அநாவசியமான சிரமம். இதுமாதிரி நடக்குமென்று நான் நினைக்கவில்லை" என்றேன்.

"நீங்கள் உடம்பை அலட்டிக் கொள்ளாமல் நான்கு நாட்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். உங்களுடைய இந்த உடல் நலிவுக்கு நான்தான் காரணம் என்று நினைத்தால் ரொம்ப வருத்தமாக இருக்கிறது. உங்களை ரொம்ப வேலை வாங்கி விட்டோம்" என்றார் பாஸ்கரன்.

"அது உங்கள் தவறில்லை, ஸார்! அவள் தன் உடம்பைக் கவனித்துக் கொள்வதே இல்லை. சரியாகச் சாப்பிடுவதில்லை. நல்ல தூக்கம் கிடையாது. இரவு வேலை செய்யும் நாட்களில் பகலில் தூங்குவதில்லையாம்.



முனிசாமி கவுண்டர் சொன்னார். இனிமேல் நான் இந்த வீட்டிலேயே இருந்து இவளைக் கவனித்துக் கொள்ளப் போகிறேன்" என்று கூறினார் ராஜாராம்.

"இவருக்கு ஏதோ மனவேதனை இருக்க வேண்டும் என்றும், அதோடு அதிக வேலையும் சேர்ந்து பலஹீனமாக இருக்கிறாரென்றும் டாக்டர் என்னிடம் கூறினார். நரம்புகளெல்லாம் தளர்ந்திருக்கின்றனவாம். ரத்தம் போதிய அளவு இல்லையாம். நல்ல 'டானிக்' சாப்பிட்டால் போதுமென்று கூறினார். நீங்கள் சொல்வது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். பொதுவாகப் பெண்களுக்குக் கவலைப் படுவதென்றாலே பிடிக்கும். தவிர, இவருக்குக் கவலைப் படவும், ஏக்கமடையவும் காரணங்கள் இருக்கின்றன. உடம்பை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொண்டாலாவது தேவலை" என்றார் பாஸ்கரன்.

"இனிமேல் கவனித்துக் கொள்கிறேன், டைரக்டர் ஸார்! இப்போது நமக்காக ஸ்டுடியோவில் எல்லோரும் காத்துக் கொண்டிருக்க மாட்டார்களா?" என்று கேட்டேன்.

"நீங்கள் மயக்கம் போட்டு விழுந்து விட்டீர்களென்று ராஜாராம் டாக்டர் வீட்டிலிருந்து டெலிபோனில் சொன்னார். நான் உடனே ஷூட்டிங்கை ஒத்தி வைத்து விட்டு இங்கு வந்தேன். நான் வந்தவுடன் நீங்கள் விழித்துக் கொண்டீர்கள்" என்றார்.

"அவ்வளவு நேரமா நான் பிரக்ஞை இல்லாமல் கிடந்தேன்?"

"சுமார் பதினைந்து நிமிடங்கள் அப்படி இருந்தாய். டாக்டர் வீடு நான்கு வீடுகள் தள்ளி இருப்பதால் உடனே கூப்பிடுவதற்கு முடிந்தது" என்றார் ராஜாராம்.

எனக்கு அதிசயமாக இருந்தது. 'அப்பா, அம்மா இருவரும் இறந்து போனபோது கூட நான் மயங்கி விழவில்லையே? ரங்கதுரைக்கு ஏதேனும் நேர்ந்து விட்டிருக்குமோ என்ற நினைப்பே என்னை மூர்ச்சையாகச் செய்து விட்டதே. உடல் அவ்வளவு தூரம் பலவீனமாகி யிருக்கிறதா என்ன?' என எண்ணிக் கொண்டே இருந்தபோது கவுண்டரின் பத்தினி கதவருகில் எட்டிப் பார்த்தது தெரிந்தது. பாவம்! எனக்கு உடம்புக்கு வந்துவிட்டால் அவருக்குக் கைகாலே ஓடாது. என்னை அத்தனை அருமையுடன் அவர் கவனித்திருக்கவில்லையானால் நான் நோயாளியாகவே படுத்த படுக்கையில் இருந்திருப்பேன்.

கவுண்டரைப் பார்த்து, "கவலைப் பட வேண்டாம். எனக்குச் சரியாகி விட்டது என்று அம்மாவிடம் சொல்

லுங்கள்" என்றேன். வேற்று மனிதர்கள் யாரேனும் இருந்தால் அவர் மனைவி உள்ளே வர மாட்டார்.

அன்று மாலை நான் தனியே என் அறையில் படுத்துக் கொண்டிருந்தேன். திரும்பத் திரும்ப என் தந்தை காசிலிங்கத்தைப் பற்றியும், ரங்கதுரையைப் பற்றியுமே சிந்தனைகள் வந்து கொண்டிருந்தன. அப்போது ராஜாராம் வந்தார்.

"இந்து! ஏதாவது குருட்டு யோசனை செய்து கொண்டே இருக்காதே. பொழுது போகாவிட்டால் நல்ல கதைப் புத்தகங்கள் படியேன். உன்னிடம்தான் ஏகப்பட்ட புத்தகங்கள் இருக்கின்றனவே?" என்றார்.

"நீங்கள் தயவு செய்து என்னை விமலா என்றே கூப்பிடுங்கள். டைரக்டர் கூட நீங்கள் கூப்பிடுவதைப் பார்த்துச் சில சமயம் இந்து என்று கூப்பிடுகிறார். இப்படியே எல்லோருக்கும் தெரிந்துவிட்டால் பிறகு ரகசியம் என்ன வேண்டியிருக்கிறது?"

"ஆமாம்! குடி முழுகிப் போய் விடுமாக்கும்? பெரிய சிதம்பர ரகசியம் தான். நான் வேண்டுமானால் விமலா என்றே கூப்பிட முயற்சிக்கிறேன். பழக்கத்தை மாற்றுவது இலேசில் நடக்கக்கூடிய காரியமா? அது சரி! உன் உடம்பு எப்படி இருக்கிறது?"

"இப்போது தேவலை, ராஜாராம்! உங்களிடம் ஒன்று சொல்ல வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்தேன். காலையில் நீங்கள் கூறியது போல் இந்த வீட்டிலேயே இருந்து விட்டால் என்ன? ஒரு அசௌகரியமும் இல்லையே? உங்களுக்கும் அனாவசியமாக வாடகை கொடுப்பது மிச்சமாகும். ஹோட்டலில் சாப்பிடவும் வேண்டாம். இவ்வளவு தூரம் ஒரு குடும்பம் போல் ஆகிவிட்ட பிறகு நீங்கள் இங்கேயே இருப்பதுதான் நியாயம். கவுண்டரும் அதையேதான் சொல்லுகிறார்."

"எனக்கு என்ன கவலை, விமலா? சோறு கண்ட இடம் சுவர்க்கம். திண்ணை கண்ட இடம் கைலாஸம். நான் அனேகமாக இங்குதானே இருக்கிறேன்? இங்கேயே இருப்பதனால் புதிதாக என்ன சௌகரியம் ஏற்பட்டு விடப் போகிறது?"

"அதனால்தான் சொல்கிறேன். இங்கேயே இருந்து விட்டால் பணம் மிச்சமாயிற்றே?" என்றேன்.

"அடேயப்பா! உனக்கு எப்போது பணத்தின் மேல் இவ்வளவு கரிசனம் ஏற்பட்டது?" என்று கேட்டார்.

"இன்றுதான் ஏற்பட்டது. ரங்கதுரை உயிரோடு இருக்கிறாரா இல்லையா? இருந்தால் எங்கே இருக்கிறார் என்று எப்படியாவது கண்டுபிடித்து விட வேண்டும். என்னை மறந்து விட்டிருந்தால் என் வாழ்வு பாழாகி விட்ட போதிலும், அவர் சௌக்கியமாக இருக்கிறார் என்ற எண்ணம் எனக்குத் திருப்தி அளித்துக் கொண்டிருக்கும். ஒருவேளை அவர் என்னைத் தேடிக் கொண்டிருந்து நான் இருக்குமிடம் அவருக்குத் தெரியாமலிருந்தால் என்னை நான் மன்னித்துக் கொள்ளவே முடியாது. என்னால் இயன்றவரை அவரைத் தேடிப் பார்த்துவிடப் போகிறேன். நாம் சம்பாதிக்கும் ஒவ்வொரு ரூபாயையும் அதற்காகவே செலவிடப்போகிறேன். சீமைக்கே போய்ப் பார்க்க வேண்டுமென்றாலும் நான் தயங்கப் போவதில்லை. உங்களைத்தான் நான் இதற்கு நம்பியிருக்கிறேன்" என்று ஆவேசத்துடன் அவரிடம் பட படவென்று பொழிந்து தள்ளினேன்.

ராஜாராமின் முகம் ஏதோமாதிரி இருந்தது. துயரத்தின் ரேகைகள் முகத்தில் படர்ந்தன. அவருடைய கண்களின் ஓரத்தில் ஒரு சொட்டுக் கண்ணீர்த் துளி பளபள வென்று மின்னியது. (தொடரும்)

●● சென்ற ஜூன் 30ம் தேதி முடிவான அரை ஆண்டு கணக்கின் தணிக்கைப்படி சகல வித செலவு இனங்களுக்கு ஈடு செய்தது போக நிகர லாபம் ரூ. 9,15,333-12-10 என்பதாக இந்தியன்பாங்க் நிர்வாகிகள் அறிவிக்கின்றனர். சென்ற வருஷ மீதியுள்ள லாபத்துடன் இது ரூ. 10,46,673-13-9 ஆகிறது. இதில் ரூ. 1,00,000/- ரிசர்வ் நிதிக்கும், ரூ. 50,000/- ஸிங்கிங் பண்ட் நிதிக்கும், ரூ 3,80,000/- வரிகளுக்கும், ரூ. 15,000/- கட்டட நிதிக்கும் ஒதுக்கியது போக மிச்சத்தில் (வருமான வரி நீங்கலாக) இடைக்கால டிவிடெண்ட் 5% வீதமும் போனஸ் 1% வீதமும் வழங்கத் தீர்மானித்துள்ளனர். இதற்கு ரூ. 3,48,000/- போக மீதமுள்ள ரூ. 1,53,673-13-9 அடுத்த அரை வருடக் கணக்கில் சேர்க்கப்படும். ●●●

# அறிவிப்பு

## புது வித பாக்கிங் அறிமுகப் படுத்தப்படுகிறது!,

ஒரு தரம் பரீக்ஷித்து




எப்பொழுதும் உபயோகப்படுத்தப் படுகிறது

# செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிட்.

இந்தியாவில் முதல் நியூமாடிக் மில்

★

நாங்கள் தயாரிப்பவை:

## சூரியன் பிராண்டு

## சிறந்த மைதா, செமோலினா

## (சூஜி அல்லது ரவை)

## மற்றும் ஆட்டா

(கைபடாதது)

★

மானேஜிங் ஏஜண்டுகள்:

## சௌந்தரராஜன் & கோ., லிமிடெட்

221, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை-1



# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர்: ரா.பி.சேதுப்பிள்ளை

## 29. தென்காசி

பாரத நாட்டிலே கங்கைக்கும் காசிக்கும் என்றும் பெருமை உண்டு. சிவகங்கையும் சிவகாசியும் தென்னாட்டில் உள்ள சிறந்த நகரங்கள். "கங்கை கொண்டான்" என்ற சிறப்புப் பெயர் பெற்றான் ஒரு சோழ மன்னன். "காசி கண்டான்" என்று பாராட்டப் பெற்றான் ஒரு பாண்டிய மன்னன்.

இப் பாண்டியன் கண்ட காசி தென்காசி என்னும் திருப்பெயர் பெற்றது. ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே வாழ்ந்த இம்மன்னனைக் "காசி கண்ட பராக்கிரம பாண்டியன்" என்று தென்பாண்டி நாடு போற்றிப் புகழ்ந்தது.

"பொன்காசை மெய்யென்று தேடிப்
புதைக்கும்இப் பூதலத்துத்
தென்காசி கண்ட பெருமான்
பராக்ரமத் தென்னவனே"

[கண்ட - உண்டாக்கிய]

என்னும் புகழ்மாலை பெற்றான் இம் மன்னன்.

வடகாசியை வாழ்விக்கும் கங்கை போல் தென்காசியைப் புனிதமாக்குவது சித்திரா நதி. "ஞானிகளும் அறியார்கள் சித்ரநதி மூலம்" என்று குற்றாலக் குறவஞ்சி அதன் பிறப்பின் மேன்மையைப் புகழ்ந்து பேசினான். திருக்குற்றால மலையில் உள்ள செழுஞ் சோலைகளிலும், செண்பகக் காடுகளிலும் நுழைந்து, பொங்குமா கடல் என்னும் பொய்கையில் விழுந்து எழுந்து தென்காசியை நோக்கி விரைந்து செல்லும் சித்திரா நதி.

"தாதுகு சோலை தோறும்
சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும்
புதுமணல் தடங்கள் தோறும்
மாதவி வேலிப் பூக
வனந்தோறும் வயல்கள் தோறும்
ஓதிய உடம்பு தோறும்
உயிரென உலாய தன்றே"

என்ற கம்பர் பாட்டுக்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும்.

சித்திரா நதியின் இருமருங்கும் பழங் காலத்தில் செண்பகக் காடு செறிந்திருந்தது. கடம்ப வனத்திலே மதுரையும், வேணு வனத்திலே நெல்லையும், தில்லை வனத்திலே சிதம்பரமும் தோன்றிய வண்ணமே செண்பக வனத்திலே எழுந்தது தென்காசி நகரம். சித்திரா நதியின் வட கரையில் நின்ற செண்பக வனத்தில் ஈசனுக்கு ஓர் ஆலயம் எடுத்தான் பராக்கிரம பாண்டியன்; பதினேழு ஆண்டு அத் திருப்பணியில் ஈடுபட்டான். கோயிற் பணி முடிந்தது. கோபுர வேலை அரைகுறையாக இருந்தபொழுது இறைவன்

திருவடி அடைந்தான் மன்னன். குடிகள் எல்லாம் வாடித் துடித்தனர்; கண்ணீர் வடித்தனர். "காசி கண்ட காவலனே! எடுத்த திருப்பணியை முடிப்பதற்கு முன் எங்கே சென்றாய்?" என்று ஏங்கினர்.

"கோதற்ற பத்தி அறுபத்து
மூவர்தம் கூட்டத்தினோ
தீதற்ற வெள்ளிச் சிலம்பகத்தோ
செம்பொன் னம்பலத்தோ
வேதத்தினோ, சிவலோகத்
தினோவிசுவ நாதன்இரு
பாதத் தினோசென்று புக்கான்
பராக்ரம பாண்டியனே"

[சிலம்பு - மலை]

என்று பாடினார் ஒரு பாவலர்.

"தென்காசி கண்ட எங்கள் மன்னன், செயற்கரிய செய்து சிவகதியுற்ற திருத் தொண்டர் குழாத்திற் கலந்தானோ? வெள்ளிமா மலையில் வீற்றிருந்தருளும் விமலன் திருவடி அடைந்தானோ? பூலோக கைலாசம் என்னும் தில்லைப் பொன்னம்பலத்தில் புகுந்தானோ? அழிவற்ற மறையோடு மறையாய் மறைந்தானோ? சிவலோகத்தில் சென்று சேர்ந்தானோ? இரு காசியிலும் கோயில் கொண்ட ஈசன் தாள் எய்தினனோ?" என்று வருந்தினர்.

"பணியுமாம் என்றும் பெருமை" என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கு ஒரு சான்றாக விளங்கினான் பராக்கிரம பாண்டியன். பல்லாண்டுகளாக மெய் வருத்தம் பாராது, அல்லும் பகலும் உழைத்து, பொன்னும் பொருளும் செலவிட்டுக் கட்டிய திருக்கோயிலில் தன் புகழ் விளங்க வேண்டும் என்ற ஆசை இறையளவும் அம்மன்னன் மனத்தில் இல்லை. "இது என் செயல் அன்று; என்னை ஆளும் ஈசன் செயல்" என்று அத்திருக் கோயிலில் எல்லோரும் அறியக் கல்லிலே எழுதியுள்ளான் இக் காவலன்.

"சேலே றியவயல் தென்காசி
ஆலயம் தெய்வச் செய
லாலே சமைந்ததிங்கு என்செயல்
அல்ல அதனைஇன்னம்
மேலே விரிவுசெய் தேபுரப்
பார்அடி வீழ்ந்து அவர்தம்
பாலே வல்செய்து பணிவன்
பராக்ரம பாண்டியனே"

[சேல் - மீன்]

என்ற பாட்டு அத்திருக் கோயிற் கல்வெட்டிலே காணப்படுகின்றது. "ஈசன் அருளால் அமைந்த இந்தக் கோயில் எல்லார்க்கும் சொந்தக் கோயில். மேலும் மேலும் இவ்வாலயத்தில் திருப்பணி செய்வாரது அடியில் விழுந்து அடியேன் தொழுவேன்; அவர்க்குத் தொழும்பனாய்ப் பணி செய்வேன்" என்று பார் அறியக்கூறினான் பராக்கிரம பாண்டியன்.

தென்காசிக் கோயில் பழுது படாமல் நெடுங் காலம் நின்று நிழலிய பயனைத் தரல் வேண்டும் என்று விரும்பினான் இவ் வேந்தன். "எப்போதேனும் இக் கற்பணியில் குற்றங் குறை கண்டால் அவற்றை அப்போதே பழுது பார்ப்பவர் பாதம் பணிவேன் எப்போதும். அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்" என்று உருக்கமாகப் பாடினான் இப்பாண்டியன்.

"ஆரா யினும்இந்தத் தென்காசி
மேவும்பொன் ஆலயத்து
வாராத தோர்குற்றம் வந்தால், அப்
போதங்கு வந்துஅதனை
நேராக வேயொழித் துப்புரப்
பார்களை நீதியுடன்
பாரார் அறியப் பணிந்தேன்
பராக்ரம பாண்டியனே"

என்பது கல்லெழுத்திற் கண்ட கவி.

இப்பாண்டியனது ஆர்வத்தை உடனிருந்து அறிந்த தம்பியாகிய குலசேகர பாண்டியன் நாடாளும் உரிமை பெற்ற போது குறையாக நின்ற கோபுரத்தைக் கட்டி முடித்தான். ஒன்பது தட்டுக்களை உடையதாய் உயர்ந்து ஓங்கி நின்று தென்காசி நகருக்கு ஒரு கல்லணியாய் விளங்கிய அக்கோபுரம் பிற்காலத்தில் இடிப்



இலங்கை 'ஈழகேசரி' பொன்னையா தம்பதிகளின் புதல்வி செல்வி புனிதவதியாருக்கும், யாழ்ப்பாணம் கஸ்தூரியார் இல்லம் டாக்டர் வ.த. பசுபதி தம்பதிகளின் புதல்வன் செல்வன் சிவகுமாரன் அவர்களுக்கும் ஜூன் மாதம் 29-ந் தேதி யன்று திருமணம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இலங்கையின் பல பாகங்களிலிருந்தும் தமிழ்நாட்டிலிருந்தும் பல பிரமுகர்களும் அன்பர்கள் பலரும் இத் திருமண வைபவத்துக்கு வந்திருந்து சிறப்பித்தனர். குளிக்கரை பிச்சையப்பா கோஷ்டியினர் நாகஸ்வர இசை விருந்தளித்தனர். தமிழ் நாட்டிலிருந்து பத்திரிகை ஆசிரியர்களும் எழுத்தாளர்களும் மணமக்களை வாழ்த்தி ஆசிச் செய்திகள் அனுப்பி யிருந்தனர்.

பிடித்து வெடித்தது. இப்போது இடியுண்ட கோலத்தில் தலை பிளந்து நிற்கும் அதன் தோற்றத்தையும், பாண்டியன் பாடியுள்ள உருக்கமான பாட்டையும் பார்த்தால் 'நெஞ்சம் பொறுக்கு திலையே!'

தென்காசிப் பெருங் கோயில் கட்டிய பாண்டியன், அதனருகே அகரம் என்னும் பெயரால் ஐந்து ஊர்களையும் உண்டாக்கினான் என்பது கல்லெழுத்தால் விளங்குகின்றது. அவற்றுள் ஒன்று மேலகரம். தென்காசிக்கும் திருக்குற்றாலத்திற்கும் இடையே அமைந்த மேலகரத்திற் பிறந்த திரிகூட ராசப்பக் கவிராயர் குற்றாலக் குறவஞ்சி என்னும் அருமையான நாடகம் இயற்றியவர். அன்னாருக்குப் பரிசாக நாயக்க மன்னர் நயந்தளித்த 'குறவஞ்சி மேடு' என்ற நல்ல நிலம் குற்றாலத்தைச் சேர்ந்த காசிமேசபுரத்தில் அமைந்துள்ளது. அங்கு நாட்டப்பட்டுள்ள பழங் கல் குறவஞ்சிக் கவிராயரது வினைவுச் சின்னமாக இன்றளவும் நின்று நிலவுகின்றது.

தென்காசியில் உள்ள கல்லும் கதை சொல்லும். திருக்குற்றாலத்திற்குச் செல்லும் நெறியில் 'அடிபட்டான் பாறை' என்ற பெருங் கல்லொன்று காணப்படுகின்றது. அப்பாறையின் வரலாற்றைக் குறவஞ்சி நாடகத்திலே காணலாம்.

முன்னொரு நாள், குறுகிய மனமும் பெருகிய பணமும் உடையான் ஒருவன் குதிரைமீது ஏறிக் குற்றாலத்தை நோக்கிச் சென்றான். பாதையில் அமைந்த பாறையின் அருகே வந்தபோது அங்கு நின்றார் சிலர் அவனைத் தடுத்தார்கள். தான் என்னும் அகந்தையுற்ற அத்தருக்கன் சீற்றம் தலைக் கொண்டான். "இப்பாறை திருக்குற்றாலத்தின் எல்லை; இதன்மீது பரிமாவின் மேலேறிச் செல்லலாகாது; இது புனிதமான இடம்" என்று பணிவாகக் கூறித் தடை செய்த தென்காசி வாசிகளைத் தாறுமாறாக ஏசிவிட்டுத் தன் வாசியை ஓட்டினான் அத்தருக்கன். நடந்த குதிரையின் நான்கு கால்களும் பாறையில் நன்றாக ஒட்டிக் கொண்டன. அடியெடுக்க மாட்டாமல் அலமந்து நின்றது அவ்விலங்கு. அன்று முதல் "அடியொட்டுப் பாறை" என்று பெயர் பெற்றது அப்பாறை.

"ஆசார சனத் தருக்கன் குதிரை
அடியொட்டுப் பாறை
அடிஒட்டி நாற்போதும்
தேசத்துக் கோக்கேல்லாம்
கண்ணிக்குள் வேலந்து
சிக்குது பார்கறி தக்குதுபார்"

என்ற குறவஞ்சிப் பாட்டால் இவ்வரலாறு விளங்கும். இப்புதுமை கண்ட அடிபட்டான் பாறை என்னும் அடியொட்டுப் பாறை இப்பொழுது பொது மக்கள் உலாவும் பூஞ்சோலையாகத் திகழ்கின்றது.

## டி.கே.சி.யின் கடிதங்கள்

மீனம்பாக்கம், சென்னை.
14 — 1 — 41

இலக்கணமும் சமயமும் நாம் ஏதோ வேண்டாம் என்று சொல்லுவதாகப் பிரசாரம் செய்கிறார்கள். உண்மையில் நாம் தான் இலக்கணம் வேண்டும் என்கிறோம். தமிழ்ப் பண்டிதர்கள் இலக்கணம் வேண்டாம் என்கிறார்கள். தமிழ் பாஷை மற்ற பாஷைகளை யெல்லாம் போலத் தமிழ் மக்கள் நாவில் உருண்டோடிக் கொண்டிருக்கிற அழகான வஸ்து. நிமிஷந்தோறும் மாறுதல் ஏற்பட்டுக் கொண்டு தான் இருக்கிறது. மாறுதல்களினால் லாபமும் உண்டு; கஷ்டமும் உண்டு. ஆனால் மாறுதல்களை உண்டு பண்ணும் காரணங்களைப் பார்த்தாலோ அவைகள் கோடிக்கணக்காய்க் கிடைக்கின்றன. முன்னமே வடமொழி, தெலுங்கு முதலிய பாஷைகள் வந்து சில சில மாறுதல்கள் உண்டு பண்ணின. இப்போது பார்த்தால் ஜப்பான் முதல் சூரியன் கடைசியாக அஸ்தமிக்கும் கலிபோர்னியா வரையுள்ள நாடுகள் எல்லாம் சேர்ந்து தமிழ் பாஷையில் மாறுதல்களை உண்டு பண்ணி விடுகின்றன. யார் எத்தனைக் குட்டிக் கரணம் போட்டாலும் மாறுதலைத் தடுக்க முடியாது. கடலில் நின்று கொண்டு அலைகளைத் தடுக்க முயன்றால் என்ன கதியாகும்; அதே கதிதான். நம்மவர்களும் இப்போது முழுகித்தான் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு மூக்கில்த் தண்ணீர் ஏறுகிறது;. தும்முகிறார்கள்; அலறுகிறார்கள், 'லபோ லபோ' என்று தலையில் (மாரில் அல்ல) அடித்துக் கொள்ளுகிறார்கள். நாமோ மிதப்புகளிலும் கட்டுமரங்களிலும் உட்கார்ந்து கொண்டு, தமிழில் அலையோடு அலையாய் கும்மாளி போட்டுக் கொண்டிருக்கிறோம். மூச்சு முட்டித் திணறிக் கொண்டிருப்பவனுக்கு நம்மைப் பார்த்தால் கோபம் வராமல் என்ன செய்யும்!

ஏதோ பள்ளிக்கூடத்து மாணவர்களையும் உபாத்தியாயர்களையும் வைத்துக் கொண்டு "பண்டிதர்கள்" ஒரு வகையாகக் காலந் தள்ளிக் கொண்டு வருகிறார்கள். மாணவர்கள் அநேகமாக விழித்துக் கொண்டார்கள்.

டி. கே. சிதம்பரநாதன்

வசீகரமான

நீடித்து உழைக்கவல்ல

சொற்ப சிலவில்

# காங்கிரிட் வீடுகள்

உங்கள் காங்கிரிட் வீடுகளை எத்தகைய விசித்திர வேலைப்பாட்டிலும், சைசிலும், மாடிகளிலும் அமைக்கலாம். காங்கிரிட் வீட்டின் முதற்சிலவு நேர்மையானது. ஒரு ஆயுட்காலம் வரை உழைக்கவல்லது. அதன் செப்பனிடும் சிலவு மிகக் குறைவானது.

குறைந்த சிலவில் கட்டக்கூடிய வீடுகளின் பல விதமான பிளான்களையும், அமைப்பையும் சித்தரித்துக்காட்டும் 40 டிசைன்கள் கொண்ட புத்தகத்திற்கு தி காங்கிரிட் அஸோசியேஷன் ஆப் இந்தியா, 9, மௌண்ட் ரோடு, மதராஸுக்கு எழுதுங்கள். விலை ரூ. 1-8-0 தபால் சிலவு அணா 0-10-0 பிரத்தியேகம்.








தி சிமெண்ட் மார்க்கெடிங் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்,
9, மௌண்ட் ரோடு, மதராஸ். 4/12 ரேஸ் கோர்ஸ் ரோடு கோயம்பத்தூர்.
ஷுகர் கம்பெனி பில்டிங், பாங்களூர்.

SISTA'S-CMI 180 TAM

# கீழ் நாடுகளுக்கு

## பறந்து செல்லுங்கள்

### சிங்கப்பூர், பாங்காக்
### ஹாங்காங்
### டோக்கியோ




துரிதமான, சௌகரியமான இணைப்பு சர்வீஸ் மேற்கண்ட இடங்களுக்கு உண்டு.

**ஜாகர்தா—மணில்லா**
**செய்கோன்—ஸிட்னி**

ஏர் இந்தியா இன்டர்நேஷனல் மூலம் கான்ஸ்டலேஷன் சுகத்தில் கீழ் நாடுகளுக்கு பறந்து செல்லுங்கள். பிரயாணத்தின்போது வெஜிடேரியன் மற்றும் நான்-வெஜிடேரியன் சாப்பாடு இலவசம்.

நீங்கள் பிரயாணம் செய்கையில் தனிக்கட்டணம் எதுவுமின்றி வழியிலுள்ள எந்த ஸ்டேஷனிலும் இறங்கிக்கொள்ள முடியும். உங்கள் இஷ்டம்போல் வேண்டிய நாட்களோ வாரங்களோ கழித்தபின் நீங்கள் போய்ச் சேரவேண்டிய இடத்திற்கு பறந்து செல்லலாம்.

பிரதி வெள்ளிக்கிழமை: பம்பாய்-மதராஸ்-சிங்கப்பூர்

பிரதி ஞாயிற்றுக்கிழமை: பம்பாய்-கல்கத்தா
பாங்காக்-ஹாங்காங்-டோக்கியோ

**ஏயர்-இந்தியா**  **இன்டர்நேஷனல்**

மதராஸ்

AII.1603




தியாகராஜன் உடைகளெல்லாம் அணிந்து கொண்டாகி விட்டது. ஆபீஸுக்குக் கிளம்ப வேண்டியதுதான் பாக்கி. அவன் மனைவி பங்கஜம் வழியனுப்புவதற்காக இரேழிவரை சென்றவள் அவனுடன் பேசிக் கொண்டு அங்கேயே நின்று விட்டாள். தொடர்ந்து அவன் என்னவோ சொல்ல அவள் கலகல வென்று சிரிக்கும் சத்தம் கேட்டது.

உள்ளே மீனாக்ஷி அம்மாளுக்குப் பொறுக்க வில்லை. "ஆமாம், என்ன பேச்சு வேண்டியிருக்கிறது, ஆபீஸுக்குப் போகிற கணவனைப் போக விடாமல்! எதற்கெடுத்தாலும் சிரிப்பு ஒண்ணு வந்துவிடும் கூடவே. என்ன பேச்சோ, என்ன சிரிப்போ! அவனைச் சொல்லி என்ன பண்ணுகிறது! என் வயிற்றிலே பிறந்த பிள்ளைதான் அவள் மினுக்கிக் கொண்டு போவதற்கு முன்னால் பல்லை இளித்துக் கொண்டு நிற்கிறதே!" என்று தனக்குள்ளேயே முணுமுணுத்துக் கொண்டாள் ஆற்றாமையுடன்.

தனது ஆத்திரத்தை யெல்லாம் சேர்த்துச் சமையலறைக் கதவை அறைந்து சாத்தினாள். அப்படியாவது சத்தம் கேட்டுப் பேச்சு நிற்காதா என்ற எண்ணம் அவளுக்கு. உள்ளே திரும்பிப் பார்த்த பங்கஜம் கணவனிடம் ஏதோ சொன்னாள். அடுத்த நிமிஷம் இருவரும் சேர்ந்து புளியம்பழம் உதிர்வது போல் பலமாகச் சிரித்தார்கள்.

மீனாக்ஷி அம்மாளுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. கதவை அறைந்து சாத்தியதன் மூலம் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ள முயன்ற தனது பலவீனத்தைக் குறித்துத்தான் அந்த மினுக்கி கேலி செய்கிறாளோ! விடு விடு என்று வாயில் பக்கம் சென்றாள்.

"என்னடி அது, நானும் ஒரு நாழிகையாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன், அப்படி ஓயாத பேச்சு! தெருவிலே போகிறவர்கள் வருகிறவர்கள் கவனிப்பார்களே என்று கொஞ்சமாவது லஜ்ஜை வேண்டாம் உடம்பிலே!"— பங்கஜத்தைப் பார்த்துக் கொண்டே பேசினாள் மீனாக்ஷி அம்மாள்.

"நன்றாக இருக்கிறதே நீ சொல்லுகிறது! ஒரு கணவனும் மனைவியும் குஷியாகப் பேசிக் கொண்டிருக்கிறதைக் கவனிக்கிறவர்களுக்கு அல்லவா லஜ்ஜை இருக்கணும்!" என்றான் தியாகராஜன் சிரித்துக் கொண்டே.

கணவனுடைய இந்த ஹாஸ்யத்தைக் கேட்டு, 'பக்' என்று சிரித்து விட்டாள் பங்கஜம், மாமியார் பக்கத்தில் இருப்பதையும் மறந்து. மீனாக்ஷி அம்மாளின் 'எள்ளும் கொள்ளும் வெடிக்கும்' முகத்தைப் பார்த்ததுமே, புருஷனுடைய ஹாஸ்யத்தைப் பூரணமாக அநுபவிப்பதைத் தாற்காலிகமாக நிறுத்தி விட்டு உள்ளே செல்லத் திரும்பினாள்.

பின்னாலேயே சென்ற மீனாக்ஷி அம்மாளுக்குக் கொஞ்சம் ஏமாற்றம்தான். நாட்டுப் பெண் ஏதாவது பதில் சொல்லுவாள், பிள்ளையும் பங்கஜத்துக்குப் பரிந்து கொண்டு வருவான், அதை வைத்துக் கொண்டு ஒரு சின்ன யுத்தமே நடத்தி விடலாம் என்று வந்தவள் சொல்லி வைத்தாற்போல் இரண்டு பேருமே மௌனம் சாதித்து விடுவார்கள் என்பதை அவள் எதிர்பார்க்கவில்லை.

பங்கஜம் முன்பு தான் நனைத்துப் போட்டிருந்த புடவையை எடுத்துத் துவைப்பதில் முனைந்தாள். சமையலைச் சீக்கிரம் முடிப்பதற்காக அவசரம் அவசரமாகக் குளித்துவிட்டுப் புடவையைச் சாவகாசமாகக் கசக்கிப் போடலாம் என்று நனைத்து வைத்திருந்தாள். மீனாக்ஷி அம்மாளுக்கு இப்பொழுது பங்கஜத்தைத் திட்டுவதற்கு ஒரு பிடி கிடைத்து விட்டது.

"குளிக்கும் போதே கையோடு கசக்கிப் போட்டால் என்ன, கையா தேய்ந்து விடும்! இப்படி அது அது போட்டது போட்டபடியே கிடந்தாலே தரித்திரம். நல்ல வழக்கத்துக்கு இந்த வீட்டைக் கொண்டிருந்தால் தானே!" என்று இடித்துரைத்தாள்.

தன்னுடைய மாமியாருடைய நாக்குத்தான் எப்படியெல்லாம் புரளுகிறது என்று எண்ணிக் கொண்டாள் பங்கஜம். ஒரு வாரத்துக்கு முன்புதான் மாமியார் சொன்னது அவள் நினைவுக்கு வந்தது. அன்றைக்கு அப்படித்தான் குளிக்கும் போதே கையோடு தோய்த்துப் போட்டு விடலாம் என்று ஆரம்பித்த பங்கஜத்தை, "ஏண்டியம்மா, அதை அப்புறமாகச் செய்து கொண்டால் போதாதா! நான் ஒண்டியாய் அடுப்படியில் கிடந்து அவஸ்தைப் படுவதுதான் கண்ணில் படவில்லை என்றாலும், கணவனைக் காலா காலத்திலே ஆபீஸுக்கு அனுப்பணுமென்றாவது அக்கறையிருக்காதோ ஒரு பெண்ணுக்கு! இதையெல்லாம் சொல்லப் போனால் நான் பொல்லாதவள்" என்று பொரிந்து தள்ளினாள். இப்பொழுது வேண்டுமென்றே தன் வாயைக் கிளற வந்திருக்கும் மாமியாருடன் பேசாமல் இருப்பது தான் விவேகம் என்று அவளுக்கா தெரியாது!



ஸங்கீத வித்வான் நேரூர் ஸ்ரீ ஸ்ரீனிவாசாச்சாரியாரின் குமாரி சௌ ஜயலக்ஷ்மிக்கும் வெண்ணாற்றங்கரை ஸ்ரீ வி. ஆர். கோபாலாச்சாரியாரின் குமாரர் சிரஞ்சீவி வி. ஜி. ரங்காச்சாரிக்கும் 16-6-55 அன்று நேரூரில் சிறப்பாக விவாகம் நடந்தேறியது. வாழ்க, மணமக்கள்!

எல்லாப் பிள்ளைகளையும் போலவே கலியாணம் என்றதும் தியாகு ரொம்பவும் பிகு தான் செய்து கொண்டான். அவனுடைய விதவைத் தாயார் மீனாக்ஷி அம்மாளுக்கு, உரிய காலத்தில் வீட்டுக்கு விளக்கேற்றி வைக்க ஒரு நாட்டுப் பெண் வரவில்லையே என்பது மானாத குறையாக இருந்தது.

தியாகராஜன் கலியாணப் பேச்சைத் தட்டிக் கழித்துக் கொண்டே வந்ததற்குக் காரணம் இல்லாமல் இல்லை. இலக்கியத்தில் நிரம்ப ஈடுபாடு உடைய அவனுக்குத் தனக்கு வரப் போகிறவள் இலட்சிய மனைவியாக இருக்க வேண்டும் என்பதைப் பற்றிச் சில முடிவான அபிப்பிராயங்கள் இருந்தன.

ஆனால் பங்கஜம் அப்படி ஒன்றும் காதல் என்றும் கத்திரிக்காய் என்றும் அவன் தேடிப் பிடித்துக் கல்யாணம் செய்து கொண்டவள் அல்ல. மீனாக்ஷி அம்மாளேதான் அவளைத் தேர்தெடுத்தாள். எஸ். எஸ். எல். ஸி. வரை படித்திருந்த பங்கஜம் பிரமாதமான அழகியல்ல என்றாலும் அவளுடைய பணிவும் அடக்கமும் தியாகுவை வெகுவாகக் கவர்ந்து விட்டன. கல்யாணத்துக்குப் பிறகு அவளுடைய சுவைகளைத் தன் விருப்பப்படி மாற்றி அமைத்து விட முடியும் என்றே நம்பினான் தியாகு. பங்கஜமும் அவனுக்கு ஏமாற்றத்தை அளிக்கவில்லை. அவன் எதிர்பார்த்த அளவுக்கு மேலேயே அவனுடன் ஒத்துழைத்தாள். மிக விரைவில் கவிதைகளின் நயங்களை அனுபவித்துக் கணவனுடன் விவாதிக்கும் அளவுக்கு அவளது இலக்கிய ரசனை வளர்ந்து விட்டது.

"உங்களுடைய பேச்சுக்களின் சுவையான பகுதிகளை யெல்லாம் குறிப்பெடுக்க டாக்டர் ஜான்ஸனுக்கு இருந்தது போல் உங்களுக்கும் ஒரு பாஸ்வெல் இருந்தால் தேவலை போல் இருக்கிறதே!" என்றாள் பங்கஜம் ஒருநாள்.

"ஏன் நீதான் இருக்கிறாயே, போதாதா!" என்றான் தியாகராஜன். அவன் இதைக் கேலியாகத்தான் சொன்னான். என்றாலும் பங்கஜம் ஒரு நொடியில் உள்ளே ஓடிப்போய் ஒரு சிறிய டைரியைக் கொண்டு வந்து கொடுத்தபொழுது அவன் பிரமித்தே போய் விட்டான்.

பங்கஜம் தேதிவாரியாகத் தினந்தோறும் அவனுடைய சம்பாஷணைகளில் தான் ரசித்த பகுதிகளைக் குறித்து வைத்திருந்தாள். நவீனம் ஒன்றைப் படிப்பது போல் இருந்தது.

"நான் என்னவோ நினைத்தேன், பங்கஜம்! நீ உண்மையிலேயே பெரிய ஆள்தான். உனக்கு இருக்கிற நுணுக்கமான அறிவுக்கு நீ ஓய்ந்த நேரத்தில் கதை எழுதலாமே! 'பங்கஜம் தியாகராஜன்' என்று பத்திரிகையில் பெயர் வந்தால் எனக்குக் கூடப் பெருமையாக இருக்கும்" என்றான்.

"ஆமாம், பேரெல்லாம் உங்களுக்குத்தான் வரும். மனைவி பேரில் நீங்களே எழுதுவதாகத் தான் சொல்லிக் கொள்ளுவார்கள்! இதிலே எனக்கு என்ன பெருமை கிட்டப் போகிறது!"

"ஆமாம், இவள் கதை எழுதிக் கிழிப்பாளாக்கும். அது ஒன்றுதான் குறை" என்று முகத்தைத் தோள்பட்டையில் இடித்துக் கொண்டாள், அந்தப் பக்கம் வந்து கொண்டிருந்த மீனாக்ஷி அம்மாள்.

பங்கஜத்தை மீனாக்ஷி அம்மாளுக்கு மெள்ள மெள்ளப் பிடிக்காமற் போனதற்குக் காரணம் என்ன என்று தியாகராஜனுக்குப் புரியவில்லை. மணமான புதிதில் வருகிறவர் போகிறவர்களிடத்தில் எல்லாம் தனது நாட்டுப் பெண்ணைப் பற்றி 'உசத்தி'யாக ஒரு அத்தியாயம் தவறாமல் படித்துவந்த மீனாக்ஷி அம்மாள் வர வர மற்றவர்களிடம் குறைப்பட்டுக் கொள்ளத் தொடங்கினாள்.

"மீனாக்ஷி நீ அதிர்ஷ்டக்காரி தாண்டியம்மா. உன் நாட்டுப் பெண்ணைப் பற்றி எல்லோரும் ஒரு மட்டாகப் புகழ்கிறார்களே! தியாகுவே சொன்னானே, 'அவள் ரொம்பப் புத்திசாலி' என்று; என் பிள்ளை சொன்னான்" என்றாள் ஏதோ காரியமாக வந்திருந்த மீனாக்ஷி அம்மாளின் சிநேகிதி.

"ஆமாம். துடைப்பக் கட்டைக்குப் பட்டுக் குஞ்சலமாம். பேரைப் பார்க்கவில்லை பேரை! புத்திசாலியாம். அவள் என்ன பொடி போட்டாளோ தெரியவில்லை, இவன் தேனில் விழுந்த ஈ மாதிரி ஆகிவிட்டான். பெரியவளாச்சே என்று என்னை மதிக்கிறதுகூட இல்லை அந்தப் பெண். எப்பொழுது பார்த்தாலும் அவன் அறையிலேயே பழியாகக் கிடக்கிறாள். அவனுக்குச் சமதையாக இவளும் உட்கார்ந்து கொண்டு புஸ்தகம் படிக்கிறதும், பேசுகிறதும், பல்லை இளிக்கிறதும் கொஞ்சம்கூட நன்றாகவே இல்லை."

"என்னவோம்மா. இத்தனை நாளைக்கப்புறம் வந்த உன் நாட்டுப் பெண் உனக்குத் திருப்தியாக அமைந்திருக்கலாம். உம், எல்லாவற்றுக்கும் கொடுத்து வைத்திருக்கணும்."

பங்கஜத்தின் காதில் இந்தப் பேச்சு பட்ட பொழுது தான் எந்த விதத்தில் மாமியாருக்குத் திருப்தி விளைக்கத் தவறி விட்டோம் என்று ஆச்சரியப்பட்டாள். மாமியாரைத் தான் மதிக்கிறது கூட இல்லை என்று அவர் சொன்ன பொழுது அவளுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. மாமியாரிடம் அவளுக்கு மரியாதைக் குறைவு என்றால் அது வெறும் அபாண்

டம். மீனாக்ஷி அம்மாள் கடிந்து பேசும் வார்த்தைகளுக்கு என்றைக்காவது அவள் எதிர்த்து ஒரு வார்த்தை சொல்லியிருப்பாளா! தியாகராஜன் தொடக்கத்திலிருந்து அளித்திருந்த பயிற்சியின் விளைவுதான் இது. அப்படியிருக்கும்போது மாமியாரின் விசித்திர மனப்போக்குக்கெல்லாம் அவளால் விளக்கம் கண்டு பிடிக்க முடியவில்லை.

அன்று மாலை சீக்கிரமாகக் காரியாலயத்திலிருந்து திரும்பி வந்த தியாகராஜன் உற்சாகமாகப் பாடிக்கொண்டே வீட்டினுள் நுழைந்தான். முற்றத்தில் குழாயடியில் முகத்தில் சோப்பும் நுரையுமாக நின்ற பங்கஜம் கண்களுக்கு மேலாக இருந்த சோப்பை வழித்துக் கண்களைத் திறந்து பார்த்தாள்.

"சபாஷ்! இப்பொழுது உன் முகம் எப்படியிருக்கிறது, தெரியுமா! அது சரி! முகம் நிறைய சோப்பையும் வைத்துக் கொண்டு, கண்ணையும் எப்படித்தான் நீங்களெல்லாம் திறக்கிறீர்களோ, தெரியவில்லையே! நான் அப்படிச் செய்து பார்த்ததேயில்லை!"

வேறு சமயமாக இருந்தால் பங்கஜம் தக்கபடி ஏதாவது பதில் சொல்லியிருப்பாள். இப்பொழுது பங்கஜம் அதை ரசிக்கும் நிலையில் இல்லை. போதாததற்கு ஏதோ காரியமாக அந்தப் பக்கம் வந்த மீனாக்ஷி அம்மாள் தியாகுவின் பேச்சைக் கேட்டு முகத்தைச் சுளித்து அழகு காட்டிய வண்ணம் சென்றாள்.

"என்ன பங்கஜம் மறந்து விட்டாயா! உன்னை இன்றைக்குச் சினிமாவுக்கு அழைத்துப் போக வேண்டும் என்று சீக்கிரமாக வந்திருக்கிறேன்......"

"நான் இன்றைக்குச் சினிமாவுக்கு வரவில்லை. தலையெல்லாம் வலிக்கிற மாதிரி இருக்கிறது" என்றாள் பங்கஜம், வெடுக்கென்று.

"அப்பொழுது ரொம்ப சரி. என் தலை கூட வலிக்கலாமா வேண்டாமா என்ற யோசனையில் தான் இருக்கிறது. இன்னொரு நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம்" என்று சிரித்துக்கொண்டே சென்ற கணவனுக்குப் பதில் ஏதும் சொல்லத் தோன்றாமல் கனிவு பொங்கத் திகைத்து நின்றாள் பங்கஜம்.

* * *

"ஊரில் உற்சவமும் விசேஷமாக இருப்பதால் குழந்தையை அனுப்பி வைத்தால் சௌகரியமாக இருக்கும்" என்று பங்கஜத்தின் தந்தை எழுதியதைத் தொடர்ந்து தனது நாட்டுப் பெண் ஊருக்குப் புறப்பட்டுப் போனதை மீனாக்ஷி அம்மாள் பெரிதும் வரவேற்று மகிழ்ந்தாள் என்றுதான் சொல்ல வேண்டும்.

'போய்த்தான் ஆக வேண்டும்' என்று பங்கஜம் ஒற்றைக் காலில் நின்று பிடிவாதம் பிடித்ததுதான் தியாகராஜனுக்குப் புதிராக இருந்தது. "சரி! அப்படியானால் சீக்கிரம் வந்துவிடு" என்று சுருக்கமாக வழியனுப்பினான் அவன்.

பங்கஜம் ஊருக்குச் சென்று ஒரு வாரத்துக்கு மேல் ஆகி விட்டது. தியாகராஜன் இயந்திரம் போல் குளிப்பதும், சாப்பிடுவதும், ஆபீஸுக்குப் போவதும் அறையில் புத்தகம் படிப்பதுமாகப் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தான். மீனாக்ஷி அம்மாளுக்குத் தான் பொழுது போவது கஷ்டமாக இருந்தது. தியாகராஜனை ஆபீஸுக்கு அனுப்பிவிட்ட பிறகு உள்ளுக்கும் வாயிலுக்கும் நூறுதரம் நடப்பதும், மத்தியானத்தில் சிறிது நேரம் கண்ணை மூடுவதும் அவளுக்கு இதற்குள் அலுத்து விட்டன.

துளசி மாடத்தின் எதிரில் இப்பொழுது எல்லாம் அழகான கோலத்தைக் காணோம்; தோய்க்கிற கல்லில் நனைத்து வைத்திருக்கும் காரணமாகப் பளிச்சென்று தென்படுமே பங்கஜத்தின் 'வாயில்' புடவை அதுவும் இல்லை; கொல்லையில் கொத்துக் கொத்தாகக் கனகாம்பர மலர்கள் பறிப்பாரற்று வாடிக் கொண்டிருந்தன; தியாகராஜனுடைய மேஜையின்மேல் புஸ்தகங்களெல்லாம் தாறுமாறாக இரைந்து கிடந்தன; சாயங்காலத்தில் விளக்கேற்றும் நேரத்தில் பூஜை உள்ளிலின்று அழகிய தோத்திரப் பாடல்களின் இனிய நாதம் ஒலிக்கவில்லை......

மீனாக்ஷி அம்மாள் இந்த சூன்யத்தை உணரத்தான் செய்தாள். துளசி மாடமும், காலியான தோய்க்கிற கல்லும் அவள் கண்களில் படத்தானே செய்தன!

"என்னதான் இருந்தாலும் அந்தப் பெண் இருந்தபோது இருந்த களையும் கலகலப்புமே தனிதான். என்னத்துக்கோ அவளுடைய வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டேன்"—மீனாக்ஷி அம்மாளின் உள் மனம் வேலை செய்யத் தொடங்கியது.

திடீரென்று மீனாக்ஷி அம்மாளுக்கு அன்றைக்குக் காலையில் வந்த கடிதத்தின் ஞாபகம் வந்தது. நாட்டுப் பெண் எழுதியிருந்த அந்தக்



கடிதத்தில் 'விசேஷமாக ஒன்றுமில்லை' என்று தியாகு சொல்லியிருந்தான். ஒரு 'கவ'ரில் விசேஷமாக ஒன்றுமில்லாமல் பின் என்னதான் எழுதியிருக்கிறான் அவன்!

தியாகுவின் மேஜைமேல் கிடந்த அந்தக் கடிதத்தை எதிர் வீட்டு அம்பியைக் கொண்டு படித்துக் காட்டச் சொன்னாள். அம்பி இரைந்து படித்தான்:

"எனது அன்புக்குரியவருக்கு, அடியாள் அனேக நமஸ்காரம். இப்பவும் நான் ஒரே பிடிவாதமாக ஊருக்குக் கிளம்பி வந்தது உங்களுக்கு ஆச்சரியத்தை விளைவித்திருக்கும். நீங்கள் கோபப்பட்டிருக்க மாட்டீர்கள் என்பதை நான் அறிவேன். உங்களுக்குத்தான் கோபமே வராதே! ஆனால் அதன் காரணமாக வருத்தம் ஏற்பட்டிருந்தால் என்னை மன்னிக்கவும். நிற்க. நான் அப்படிச் செய்ததன் காரணத்தைத் தெரிந்து கொண்டால் நீங்கள் என்னைப் பாராட்டுவீர்கள் என்பது நிச்சயம்.

'அம்மாவுக்கு என்னைக் கண்டாலே பிடிக்கவில்லை' என்று எல்லோரையும் போல உங்கள் மனைவி புகார் சொல்லுவதை நீங்கள் விரும்ப மாட்டீர்கள் என்று எனக்குத் தெரியும். இருந்தாலும் உண்மை அதுதான் என்று உங்களுக்கும் தெரியும். இதற்குக் காரணம் எதுவாக இருக்கும் என்று நான் மண்டையை உடைத்துக் கொண்டு பார்த்தேன்.

இதன் காரணம் ஒரு விதமான பொறாமை உணர்ச்சி என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. (அவசரப் படாதீர்கள்! முழுக்கப் படியுங்கள்!) தான் இதுகாறும் அன்புகொண்டு ஆதிக்கம் செலுத்தி வந்த தன்னுடைய மகன் மீது திடீரென்று இன்னொருத்தி—அது அவனுடைய சொந்த மனைவியாகவே இருந்தாலும் சரி—முழு ஆதிக்கம் செலுத்துவதை எல்லாத் தாய்மார்களும் ஒரே மாதிரியாக ஏற்றுக் கொள்ளுவதில்லை. நீங்களும் நானும் இழைந்த விதம் அம்மாவின் புண்ணிய மனத்தில் மேற்படி உணர்ச்சியைத் தூண்டி விட்டிருக்கக் கூடும் என்று நான் அஞ்சுகிறேன். இதனால் அம்மாவின் பேரில் எனக்கு மரியாதைக் குறைவோ வெறுப்போ கிடையாது என்று நான் சொல்லாமலே நீங்கள் அறிவீர்கள். ஏனென்றால் அடிப்படையில் தூய அன்பாக இருந்த ஒன்றின் விகாரம்தானே அந்த உணர்ச்சியும். ('ஏது உனது மனத் தத்துவ ஆராய்ச்சி பிரமாதமாக இருக்கிறதே' என்று நீங்கள் என்னைப் புகழ்வது அப்புறம் இருக்கட்டும்!) இப்பொழுது தெரிந்ததா ஏன் அன்று நீங்கள் அவ்வளவு வருந்தி அழைத்தும் நான் சினிமாவுக்கு வரவில்லை என்று!

கொஞ்ச நாள் நான் இல்லாமல் இருந்தால் தான் அம்மாவின் மனம் மாறும் என்று நினைத்துத்தான் நான் இங்கு வந்தேன். நான் திரும்ப வரும் போது அம்மா முற்றிலும் மாறி யிருப்பார் என்றே நம்புகிறேன். அவருக்கு எனது நமஸ்காரத்தைச் சொல்லவும்,

அன்புடன் உங்கள்
பங்கஜம்."

பின் குறிப்பு: இங்கு வந்த பிறகு நீங்கள் சொன்னபடி இரண்டு கதைகள் எழுதி வைத்திருக்கிறேன். வந்த பிறகு படித்துக் காட்டுகிறேன். நீங்கள் கேலி செய்யக் கூடாது, சொல்லி விட்டேன். — பங்கஜம்."

அம்பி கடிதத்தைப் படித்துக் கொண்டே வந்தபோது மீனாக்ஷி அம்மாளின் மனம் நெகிழ்ந்து கொண்டே வந்தது. கடிதம் முடிந்தவுடன், "பங்கஜம் ரொம்பச் சமர்த்துத் தான். என்னவோ சொல்லுவாளே 'நிழலருமை வெய்யிலிலே' என்று. அது மாதிரி அவள் இல்லாத போதல்லவா அவள் பெருமை தெரிகிறது! அவளைப் பிடிக்காமல் போனதற்குக் காரணத்தைத்தான் என்ன மாதிரி எழுதியிருக்கிறாள். எனக்கே இதுவரைக்கும் அது தெரியவில்லையே" என்று சொல்லிப் புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

அன்று இரவு தியாகராஜனுக்குச் சாதம் போடும்பொழுது, "ஏண்டா தியாகு, பங்கஜம் ஊருக்குப் போய்ப் பத்து நாளைக்கு மேலே ஆகிறதே, கொண்டு வந்து விடும்படி கடிதாசு போடுகிறதுதானே! அவள் இல்லாமல் வீடே வெறிச்சென்று கிடக்கிறது" என்று சொன்ன மீனாக்ஷி அம்மாளை, கையில் எடுத்த கவளத்தை அப்படியே வைத்துக் கொண்டு, ஆச்சரியத்துடன் பார்த்தான் தியாகராஜன்.



● பிரபல நாகஸ்வர வித்வான் செம்பொன்னார் கோவில் கோவிந்தசாமிப் பிள்ளை சென்ற 7-7-55 அன்று மாரடைப்பு நோயினால் காலமான செய்தி சற்றும் எதிர்பாராத விதமாக வந்தது. சங்கீத உலகுக்கு அவர் மறைவு பெருநஷ்டமாகும். இதை நாகஸ்வர உலகிலே புகழ் பெற்ற வித்வான்களான திருவீழிமிழலை சகோதரர்கள் பின்வருமாறு எழுதுகிறார்கள்:—

"......அன்னார் காலமானது நாகஸ்வர உலகத்திற்கே பெரிய நஷ்டம். பல்லவி வாசிப்பதில் தமது தந்தை செம்பொன்னார் கோவில் ராமசாமிப் பிள்ளையைப் போலவே கோவிந்தசாமி பிள்ளை தமக்கு நிகர் தாம் என விளங்கி வந்தார். இனி அப்படிப் பல்லவி வாசிப்பதற்கு ஒருவரும் கிடையாது......"

திரு கோவிந்தசாமி பிள்ளை அவர்களின் பிரிவால் வருந்தும் அவரது குடும்பத்தினருக்கு நமது மனமார்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.




"தபால்!"

நிலைக் கண்ணாடியின் எதிரில் நின்றுகொண்டு காரியாலயத்துக்குச் செல்வதற்காக உடையணிந்து கொண்டிருந்த சாம்பமூர்த்தி, தபால்காரனின் குரலைக் கேட்டதும் தன் மனைவியைத் திரும்பி நோக்கினார். சமையலறைக் கதவில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்த காமாக்ஷி தலைக்கு மேலாக எங்கோ வெறித்து நோக்கிக் கொண்டிருந்தாள்.

ஆறு மாதங்களுக்கு முன்பு வரையில் தபால்காரனின் குரலைக் கேட்டதும் ஆவலுடன் விரைந்தோடிச் சென்று கொண்டிருந்த தன் மனைவியின் இந்த மாற்றத்தைக் கண்டு மனங் கலங்கிய வண்ணம் சென்று தபால்காரன் போட்டு விட்டுச் சென்றிருந்த கடிதத்தை எடுத்து வந்தார்.

நாற்காலியில் அமர்ந்து கடிதத்தைப் படித்து முடித்ததும் அதிலுள்ள விஷயத்தைக் காமாக்ஷியிடம் எப்படிச் சொல்வது என்று தயங்கினார். முற்றத்தினருகில் சென்று வானத்தை அண்ணாந்து நோக்கினார்.

கவலையால் சூழப்பட்ட மனத்தைப் போல் கதிரவன் மேகங்களால் மூடப்பட்டுக் கிடந்தான். மழை வருவதற்கு முன் காரியாலயத்துக்குப் புறப்பட வேண்டுமென்ற எண்ணத்துடன் காமாக்ஷியைப் பார்த்து, "காமு" என்று அழைத்தார். காமாக்ஷி ஒன்றும் பதில் சொல்லாமல் பார்வையை மட்டும் அவர் பக்கம் திருப்பினாள். "காமு, ராமமூர்த்திதான் கடிதம் எழுதியிருக்கிறான். லலிதாவுக்கு இதுதான் மாசமாம். மிகுந்த தயக்கத்துடன் உன்னை அனுப்ப முடியுமா என்று கேட்டிருக்கிறான். நீ அங்குபோனால் அந்தக் குழந்தைகளின் முகத்தைப் பார்த்தாவது உன் துக்கம் கொஞ்சம் குறையும்..." என்று முடிப்பதற்குள் காமு குறுக்கிட்டாள். "என்ன சொன்னீர்கள்! நான் போவதா! கருவேப்பிலைக் கொழுந்து மாதிரி இருந்த என் மாலதியே போய் விட்டாள். என் வயிற்றைப் பிடுங்கிய தெய்வம் அவள் வயிற்றில் கொண்டு வைத்திருக்கிறது. ஏற்கனவே உள்ள நாலையுமே அவர்களால் சமாளிக்க முடியவில்லை. இப்பொழுது எதற்கு அவளுக்குக் குழந்தை! இந்தத் தடவை என்னால் போக முடியாது" என்றாள். இத்தனை நேரமாகக் குமுறிக் கொண்டிருந்த வானம் பொழிய ஆரம்பித்தது.

சாம்பமூர்த்தி, "காமு, வரம்பு மீறிய துக்கத்தால் எல்லை மீறிப் பேசுகிறாய். மாலதி தன்னுடன் உன்னுடைய விவேகத்தையும் எடுத்துச் சென்று விட்டாளா! எதற்கும் நிதானமாக யோசித்துப் பார்!" என்று கூறிவிட்டுக் காரியாலயத்துக்குச் சென்றார்.

கணவர் சென்ற பிறகு காமு வாசற்கதவைத் தாழிட்டுக் கொண்டு ஊஞ்சலில் வந்து படுத்தாள். ஊஞ்சலுக்கு எதிர்ப்புறச் சுவரில் மாலதியின் பெரிய புகைப்படம் மாட்டியிருந்தது. காமாக்ஷியின் கண்கள் அப்படத்தில் சென்று நிலைத்தன. பத்து வயதே ஆகியிருந்தபோதிலும் பதினாறு வயது மதிக்கக் கூடிய வாளிப்பான உடல், சுருண்ட கேசம், உருண்டையான முகம், குறுகுறுத்த விழிகள், இதுதான் அப்படத்திலிருந்த மாலதி. காமாக்ஷியின் கண்கள் கரகரவெனக் கண்ணீரைப் பெருக்கின.

சாம்பமூர்த்திக்கும் காமாக்ஷிக்கும் வெகுநாள் புத்திரப் பேறு இல்லாமலிருந்தது. பல நோன்புகள் நூற்று அருமையாகப் பிறந்தவள் தான் மாலதி. தாய் தந்தையர் அவளைக் கண்ணின் மணியெனப் போற்றி வளர்த்தனர். மாலதி எல்லாவற்றிலும் கெட்டிக்காரியாகத் தான் விளங்கினாள். பத்தாவது வயதில் பள்ளிக்கூட நாடகத்தில் கிருஷ்ணன் வேடம் தாங்கி அற்புதமாக நடித்தாள். பார்த்தவரெல்லாம் பாராட்டினர். அன்றிரவே தலைவலி என்று படுத்தாள். கடைசியில் பெற்றோரைப் பரிதவிக்க விட்டுவிட்டுக் கண்ணையும் மூடிவிட்டாள். கண்ணிலான் பார்வையைப் பெற்று மறுபடியும் இழந்ததைப் போல் காமாக்ஷியும் சாம்பமூர்த்தியும் துடித்தனர். நாளடைவில் சாம்பமூர்த்தி 'நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான்' என்று மனத்தைத் தேற்றிக் கொண்டு தம் தினசரி வேலைகளில் ஈடுபட்டார். ஆனால் காமாக்ஷியோ சதா மாலதியின் நினைவாகவே இருந்து கொண்டு பித்துப் பிடித்தவள் போலிருந்தாள்.

சாம்பமூர்த்தியின் தம்பிதான் ராமமூர்த்தி. அவன் மனைவி லலிதா மிகுந்த குணவதி. ஓரகத்திகள் இருவரும் மிகுந்த அன்யோன்யமாக இருந்தனர். தாயற்றவளான லலிதாவுக்

குக் காமாக்ஷிதான் பிரசவங்களுக் கெல்லாம் உதவி செய்யப் போவாள். மாலதியின் மறைவைக் கேட்ட அவ்விருவரும் பறந்தோடி வந்தனர். அன்னுவையும், மன்னியையும் பல விதங்களிலும் தேற்ற முயன்றனர். லலிதாவும், ராமமூர்த்தியும் காமாக்ஷியைத் தங்களுடன் வந்து கொஞ்ச காலம் இருக்கும்படி எவ்வளவோ வேண்டியும் அவள் கண்டிப்பாக வர மறுத்து விட்டாள். உடன் பிறந்த சகோதரியைப் போல் பாவித்து வந்த லலிதாவிடம் அவளுக்கு எப்படியோ பொறுமை ஏற்பட்டு விட்டதுதான் காரணம். தன் ஒரே குழந்தையையும் இழந்து நிற்கையில் லலிதா மட்டும் நான்கு குழந்தைகளுக்குத் தாயாக இருப்பதைக் கண்டு அவள் நெஞ்சம் குமுறியது. புத்திசாலியான லலிதா தன் ஓரகத்தியின் மன மாறுதலை அறிந்து கொண்டாள். அதிகமான துக்கத்தினால் மன்னியின் மனம் சலனமடைந்திருக்கிறது. நாளாவட்டத்தில் எல்லாம் சரியாகி விடுமென்ற நம்பிக்கையோடு அவளை மேலும் வற்புறுத்தாமல் ஊருக்குச் சென்று விட்டாள். இப்பொழுது அவளுக்குப் பேறு காலம் சமீபித்து விட்டது. ராமமூர்த்தி இந்த ஆறு மாதங்களுக்குள் மன்னியின் மனம் மாறியிருக்கும் என்ற எண்ணத்தில் மிகுந்த தயக்கத்துடன் அவளை அனுப்ப முடியுமா என்று கேட்டு எழுதியிருந்தான்.

"அம்மா!" என்ற குரல்கேட்டு, காமாக்ஷி சிந்தனை கலைந்து திடுக்கிட்டு எழுந்தாள். எதிரே அவள் வீட்டு வேலைக்காரக் காத்தாயி நின்று கொண்டிருந்தாள்.

காமாக்ஷி "என்னடி, துணியெல்லாம் துவைத்தாகி விட்டதா!" என்று காத்தாயியைக் கேட்டாள்.

காத்தாயி, "எல்லா வேலையும் செய்தாகி விட்டது, அம்மா! இன்று சாயங்காலம் நான் வரமாட்டேன். அதைச் சொல்லத்தான் வந்தேன்!" என்றாள்.




காமாக்ஷி, "ஏண்டி! என்ன விசேஷம்!" என்று கேட்டாள்.

காத்தாயி, "என் மருமகன் வந்தான்......" என்று சொன்னதும், அசுவாரஸ்யமாக எங்கோ பார்த்துக் கொண்டிருந்த காமாக்ஷி திடுக்கிட்டு நிமிர்ந்து, "அவன் என்னத்துக்காக இப்பொழுது வந்தான்!" என்றாள்.

காத்தாயி, "அவன் பெண்சாதி தங்கமைக்கு இடுப்பு வலி கண்டிருக்காம். ஆசுபத்திரியிலே கொண்டு விட்டிருக்கான். ஒத்தாசைக்கு வேறு ஒருவருமில்லையெனக் கெஞ்சினன். நானும் வருவதாக ஒத்துக் கொண்டு விட்டேன். அதனால்தான் சாயந்திரம் வர முடியாது என்றேன்" என்றாள்.

காமாக்ஷி, "காத்தாயி, உன் மனசு என்ன கல்லா! இருபது வயசு மகளை வாரிக் கொடுத்து இன்னும் ஒரு வருஷம்கூட ஆகவில்லை. அதற்குள் அவளுடைய சக்களத்திக்கே ஒத்தாசைக்குப் போகிறேன் என்கிறாயே! என்னடி இது!" என்று கேட்டாள்.

காத்தாயி தழு தழுத்த குரலில் கூறினாள்: "எம்மா, என்ன பாவத்தைப் பண்ணியோ நம்முடையது நமக்குத் தங்க வில்லை. அதற்காகப் பிறரைப் பார்த்துப் பொறுமைப் பட முடியுமா! இப்பொழுது இவளுக்கு உதவி செய்யாமலிருப்பதால் என் மகள் எழுந்து வந்து விடப் போகிறாளா! ஆசுபத்திரிக்கு நாழிகையாகி விடும். நான் விடியற்காலம் வந்து விடுகிறேன்" என்று கூறி விட்டுச் சென்று விட்டாள்.

காமாக்ஷி வெகு நேரம் வரை ஸ்தம்பித்துப் போய் உட்கார்ந்திருந்தாள். கல்வியறிவு சிறிதும் இல்லாத ஒரு பாமர ஸ்திரீக்கு இருக்கும் விவேகமும், பெருந்தன்மையும் தனக்கு இல்லாமல் போய் விட்டதே என்று தன்னையே நொந்து கொண்டாள்.

மாலையில் வீட்டுக்குள் நுழைந்த சாம்பமூர்த்தி கூடத்தில் கட்டி வைக்கப்பட்டிருந்த மூட்டைகளைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார். சமையலறையிலிருந்து வேகமாக வெளிவந்த காமாக்ஷி, "சீக்கிரம் கைகால் அலம்பிக் கொண்டு சாப்பிட வாருங்கள். எட்டு மணி ரயிலுக்குப் போக வேண்டும். இப்பொழுதே லலிதாவுக்கு உடம்பு எப்படி இருக்கிறதோ!" என்று கூறி விட்டு மறுபடியும் உள்ளே சென்றாள். கால் அலம்புவதற்காக முற்றத்தில் இறங்கிய சாம்பமூர்த்தி நிமிர்ந்து ஆகாயத்தை நோக்கினார். காலையிலிருந்து விடாமல் பெய்து கொண்டிருந்த மழை ஓய்ந்து வானம் அலம்பி விடப்பட்ட நீலப் பளிங்குத் தரையைப் போல் நிர்மலமாக விளங்கியது. அவர் மனமும் குழப்பம் நீங்கித் தெளிந்திருந்தது.




விளையாட்டு அரங்கங்களில் கால் பந்துக்குத்தான் எத்தனை மகிமை! சிறியதோர் 'லீக்' போட்டிக்குக்கூடத் திரள் திரளாக ஜனங்கள் ஏன் வருகிறார்கள்! இந்தியாவில் மட்டுமல்ல; உலகத்தில் எங்கு கால்பந்து விளையாடினாலும் அங்கு அதற்கு ஏன் இத்தனை மவுசு! இந்தக் கேள்விகளுக்குப் பதில் என்னவாக இருக்க முடியுமென்று நான் பல தடவை எண்ணியதுண்டு. ஆனால் சரியான விடை இது வரை எனக்குப் புலப்பட வில்லை.

இவ் விளையாட்டுக்கான கருவிகள் எளிதாகக் கிடைப்பதனாலா! சில விளையாட்டுக்களில் உள்ள கருவிகளைப் போல் இல்லாமல், கடவுள் கொடுத்த காலையும், தலையையுமே உபயோகப்படுத்தினால் போதும் என்றிருப்பதினாலா! அல்லது ஒரு 'கோல்' போட்டால் எல்லாரும் பார்த்து மகிழக் கூடிய சந்தர்ப்பங்கள் இருப்பதாலா! கிரிக்கட்டைப் போல நாள் கணக்கில் விளையாடாமல், ஒரு மணி நேரத்துக்குள் வேகமாக விளையாடி முடிவதாலா! இவ்வளவு கேள்விகளுக்கும் பதில் தயாரித்து நான் ஒரு முடிவுக்கு இது வரை வரவில்லை. ஆனால் ஒன்று மட்டும் உறுதியாகக் கூற முடியும். மேலே கூறிய விசேஷங்கள் எல்லாம் சேர்ந்து இருப்பதால்தான் கால்பந்தாட்டத்துக்கு விளையாட்டு அரங்கத்தில் ஒரு தனி மதிப்பும் அந்தஸ்தும் இருக்கிறது!

* * *

ஒவ்வொரு நாட்டிலும் இந்த விளையாட்டைத் தீவிரமாகப் பயிற்சி செய்கின்றனர். உலகத்தில் முதன்மை ஸ்தானம் ஒரு நாட்டுக்கு உண்டானால், அந் நாட்டவருக்கு அதைவிட வேறு மகிழ்ச்சி தரக் கூடியது என்ன இருக்கிறது! ஹங்கேரி நாடு சிறிதுகாலத்துக்கு முன் கால் பந்து விளையாட்டில் முதல் பட்டம் பெற்றிருந்தது. போன தடவை அவர்கள் ஜர்மனியால் தோற்கடிக்கப்பட்டு முதன்மை ஸ்தானத்தை இழந்தனர். ஹங்கேரி நாட்டின் விளையாட்டு மந்திரிதான் அந்த கோஷ்டியின் தலைவர். தோற்கடிக்கப்பட்டு, முதல் ஸ்தானத்தை இழந்து ஊருக்குத் திரும்பியபோது, அந் நாட்டவர்கள் கறுப்புக் கொடி காண்பித்து வரவேற்றனர். சில தினங்களுக்குப் பிறகு விளையாட்டு மந்திரி தமது பதவியை இழந்தார்! நான்கு வருஷங்கள் உலகத்தின் முதல் பதவியை வகித்து விட்டு அதைப் பறிகொடுத்தால் அந் நாட்டவர் இப்படியெல்லாம் நடந்து கொண்டதில் அதிசயம் என்ன இருக்கிறது!

இரண்டாவது மகாயுத்தத்தில் அந் நாடு சீர்குலைந்து பாழ் பட்டது. அவர்கள் தங்களது விடா முயற்சியாலும், உழைப்பாலும் மறுபடியும் நாட்டில் செழிப்பை உண்டாக்கினர். அந்த ஊக்கத்தை விளையாட்டு அரங்கத்திலும் காண்பித்தனர்.

ஹங்கேரி நாட்டின் தேசிய விளையாட்டு கால் பந்தாட்டம். பள்ளிக்கூடத்திலும், கல்லூரிகளிலும் தவிர, ஒரு லட்சம் நபர்கள் கால் பந்து விளையாடுகிறார்கள். அரசாங்கத்தார் அவர்களுக்கு ஆதரவு கொடுக்கின்றனர். விளையாட மைதானங்களும், பந்துகளும் கிரயமில்லாமலே கொடுக்கப்படுகின்றன.

* * *

இந்தியா கால் பந்து ஆட்டத்தில் ஒரு சிறிய நாடு. தேர்ச்சி அடைந்த பல்வேறு நாடுகளில் விளையாடியும் பிறநாடுகளிலிருந்து கால் பந்து கோஷ்டியினரை இந்தியாவுக்கு வரவழைத்தும்தான் இந்த ஆட்டத்தில் நாம் திறமை பெற முடியும்.

ரஷ்யாவிலும் கால் பந்துதான் தேசிய விளையாட்டு. சமீபத்தில் இந்தியாவுக்கு ஒரு ரஷ்யக் கால் பந்து கோஷ்டியினர் விஜயம் செய்து, தங்களுடைய திறமையையும் சிறப்பையும் காண்பித்தனர். அடுத்த மாதம் நம் நாட்டிலிருந்து ஒரு கோஷ்டியை ரஷ்யர்கள் அதிகார பூர்வமாக அழைத்திருக்கின்றனர். நமது நாட்டில் சிறந்த 32 விளையாட்டுக்காரர்கள் கொண்ட கோஷ்டி தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டது. ஒவ்வொரு ராஜ்யத்திலுமுள்ள பிரசித்தி பெற்ற விளையாட்டுக்காரர்கள் இந்தக் கோஷ்டியில் சேர்க்கப்பட்டுள்ளனர். சென்னையிலிருந்து பிரசித்தி பெற்ற 'விம்கோ' தங்கராஜும் தணிகாசலமும் சேர்க்கப் பட்டுள்ளனர். இது சென்னை ராஜ்ய வாசிகள் பெருமைப்படக் கூடிய விஷயமாகும். இவர்கள் ரஷ்ய விஜயம் வெற்றிகரமாக முடிவதாக!

நமது நாட்டில் மக்கள் உடலுக்கும் உள்ளத்துக்கும் ஆரோக்கியம் விளைவிக்கும் இந்தக் கால் பந்தாட்டத்தில் எதிர்காலத்தில் இன்னும் அதிக சிரத்தையும் ஊக்கமும் காட்டுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# நிரூபணம்!




சாதாரணமான எளிய பரீக்ஷைகளிலும் கூட

## புதிய

## 'ஆஸ்ப்ரோ' வலி, ஜுரம் இவற்றினின்று

துரிதமாயும், அபாயமின்றியும் நிவாரணம் அளிக்கின்றது

என்பது நிரூபிக்கப்பட்டிருக்கிறது

**சிறந்தபாக்கிங்-நிறைந்தபாதுகாப்பு**

புதிய 'ஆஸ்ப்ரோ'வுடன் கூடிய காகிதத் துண்டை ஜலத்திலிட்டு, எவ்வளவு நேரம் வேண்டுமாயினும் வைத்திருங்கள். பிறகு அத்துண்டைப் பிரித்து வில்லைகளைப் பரிசோதியுங்கள்–அவைகள் கெடாமலும், சுத்தமாயும், ஈரமில்லாமலும் இருக்கக் காண்பீர்கள்.




ஒவ்வொரு புதிய 'ஆஸ்ப்ரோ'வும், காற்று மற்றும் ஈரம் படாமல் தனித் தனியே ஸீல் செய்யப்பட்டிருப்பதனால், உதிரி வில்லைகளால் ஏற்படும் வயிற்றைப் பாதிக்கும் அமிலங்கள் சேர்வதினின்றும் பாதுகாக்கிறது.

**துரிதமான வேலை - அதி சீக்கிர நிவாரணம்**

இரண்டு புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை ஒரு கிளாஸ் ஜலத்திலிடவும். அவை நொடியில் ஜலத்தில் கரைந்து மென்மையான தூளாய் விடுகின்றன. இச்சிறந்த செய்முறை வழிக்கு எமது நன்றி. இதே மாதிரிதான் புதிய 'ஆஸ்ப்ரோ'வும் உங்கள் தேகத்திற்குள் க்ஷணத்தில் வேலை செய்ய ஆரம்பிக்கிறது.




புதிய 'ஆஸ்ப்ரோ' அதைப்போலுள்ள மற்றெவ்விதமான வில்லைகளைக் காட்டிலும் வேகமாகக் கரைகிறது, என்பதை ரசாயனசாலைப் பரீக்ஷைகள் நிரூபித்துள்ளன. புதிய 'ஆஸ்ப்ரோ'வில் துர்ப்பழக்கம் உண்டாக்கும் மருந்துகள் எதுவும் சேர்க்கப்படவில்லை, அன்றியும் அது இருதயத்தையோ வயிற்றையோ பாதிக்காது.




கைக்கடக்கமான மூன்று வில்லைகளடங்கிய பாக்கெட் விலை 2 அணா

30 வில்லைகள் கொண்ட குடும்ப சைஸ் ரூ. 1/2

279

விநியோகஸ்தர்கள்: முல்லர் அண்டு பிப்ஸ் (இந்தியா) லிமிடெட், பம்பாய், கல்கத்தா, மதராஸ், டில்லி.

# உங்களைத் தெரியும்!

**கோணல்**

"சார்......!"

"யாரது?"

"வேங்கடாசலமய்யர்வாள் இந்த வீட்டில் தானே இருக்கிறார்......?"

"ஏன் நான்தான் அவர்...... வாருங்கோ, உட்காருங்கோ......" என்றார் அந்த மனிதர். உட்காருங்கள் என்று உபசாரம் செய்ததிலிருந்து அந்த மனிதர் மிகவும் நல்ல சுபாவம் படைத்தவராகத்தான் எனக்குத் தோன்றியது. "நமஸ்காரம்" என்று பணிவாகச் சொல்லி விட்டு உட்கார்ந்தேன்.

"என்ன காரியமாக வந்தீர்கள்?......" என்று கேட்டார் அவர்.

"உங்களுக்குக் குளக்கரைத் தெருவிலே ஒரு வீடு இருக்கிறதாகத் தெரிந்தது."

"அதிலே என்ன சந்தேகம்? பதினாலாம் நம்பர் வீடு என் வீடுதான். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து இருபத்திரண்டில் அதை நான் விலைக்கு வாங்கினேன். அப்போது அது ரொட்டிக்கடை துளசிராவுக்குச் சொந்தமாயிருந்தது. அதற்கு முன்னாலே வரதராஜ அய்யருக்குச்சொந்தமாய் இருந்தது. வரதராஜய்யர் குடும்பம் நொடிந்தது. துளசிராவுக்கு விற்றார் வீட்டை. துளசிராவ் குடும்பமும் நொடிந்தது. அந்த வீட்டை என்னிடம் விற்றார்."

நான் அவரிடம் வந்த காரியம் வேறு! இவ்வளவு கதையும் என்னிடம் ஏன் அந்த மனிதர் அளக்கிறார் என்றுதான் புரியவில்லை. எப்படியோ என் காரியம் ஆக வேண்டியதற்காக அந்த மனிதருக்கு அனுசரணையாகப் போகவே நினைத்தேன். "உங்கள் கைக்கு வந்த பிறகுதான் அந்த வீடு ஒழுங்காக இருக்காப்பலே இருக்கு. நீங்கள் அதை யாருக்கும் விற்கப் போகிறதில்லையே?" என்றேன்.

என்னை அந்த மனிதர் மேலும் கீழும் ஒரு தடவை பார்த்து விட்டுக் கோபமாக, "இன்னும் எனக்கு அந்த நிலைமை ஏற்படவில்லை! ஐயா, எனக்கு ஊரிலே ஒருதம்படி கடன் கிடையாதய்யா! மாதம் இருநூறு ரூபாய் பென்ஷன் வருகிறது. என் பெரிய பிள்ளை புதுடெல்லியிலே ஐந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறான். சின்னவன் கல்கத்தாவிலே மூந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறான். என் தம்பி குளுவனூரிலே தாசில்தாராய் இருக்கிறான். என் மைத்துனன் சுகாதார இலாக்காவிலே இருக்கிறான். எங்கள் பூர்வீக கிராமமாகிய வழுந்தூரிலே மூணு வேலி நிலம் இருக்கு. அங்கே இரண்டு வீடு இருக்கிறது..." என்றார்.

"ரொம்ப சந்தோஷம், சார். நீங்கள் க்ஷேமமாய் இருக்கணும்னு தான் என் பிரார்த்தனை. உங்களுக்கு இவ்வளவு கோபம் வருமென்று நான் நினைக்கல்லே, சார். வரதராஜய்யரும் துளசிராவும் வீட்டை விற்றதைப் பற்றிச் சொன்னீர்களே அதனாலே நீங்களும் அந்த வீட்டை விற்கும் உத்தேசத்தில் இருக்கிறீர்களோ என்று நினைத்தேன். நீங்கள் அந்த வீட்டை விற்காமல் வைத்துக் கொண்டிருக்கணும் என்பதுதான் சார் என் பிரார்த்தனை" என்றேன் தணிவாக.

சட்டென்று அந்த மனிதரின் முகக்குறி மாறியது. "எனக்குக் கோபமில்லை. ஆனால் என்னைத் தாழ்வாகப் பேச யாரையும் அனுமதிப்பதில்லை. வரதராஜய்யரும் துளசிராவும் வீட்டை விற்கும்படி நேரிட்டது, ஏன் தெரியுமா? அது ஒரு பெரிய கதை. சொல்கிறேன் கேளுங்கள்" என்று பின்னால் சொல்லப் போகும் சுவாரஸ்யமான கதைக்கு மூத்தாய்ப்பு வைத்தார்.

'இதேதடா கஷ்டம். நாம் ஏதோ காரியமாக வந்திருக்கிறோம். இந்த மனுஷன் ஏதோ கதையெல்லாம் சொல்ல ஆரம்பிக்கிறாரே' என்று எனக்குக் கலக்கமாயிருந்தது. "கதை இருக்கட்டும். சாவகாசமாய்க் கேட்கணும் அதெல்லாம். முதலில் உங்கள் சிநேகிதம் கிடைத்ததே பெரிய பாக்கியம் சார். நான் வந்த காரியம் முக்கியமாக..." என்று நான் முக்கிய விஷயத்துக்கு வரும்போது அந்த மனிதர் இடைமறித்தார்.

"காரியம் இருக்கட்டும், சார். முதலில் உங்களை யாரென்று நான் தெரிந்து கொள்ளவில்லையே? நான் வேலையிலே இருந்த முப்பது வருஷத்திலே என்னை நாடி வராத மனுஷ்யாளே உலகத்தில் கிடையாது. என்னை நாடி யார் வந்தாலும் சரி அவர்களைப் பற்றிப் பூர்ணமாய்த் தெரிந்து கொள்ளாத வரையில் விடுவதில்லை. அடிக்கடி உத்தியோகம் மாற்றலாகிக் கொண்டிருந்ததால் சுமார் இருபது ஊராவது பார்த்திருப்பேன். முதன் முதலில் கஞ்சத்தில் போட்டார்கள். அப்புறம் விசாகப்பட்டினம், அதற்கப்புறம் செங்கல்பட்டு. மறுபடியும்......" அவர் பாக்கி ஊர்களை எல்லாம் பற்றிச் சொல்லிக் கொண்டு வரும் வரை எனக்குப் பொறுமை இருக்காது போலிருந்தது.

"என்னை யாரென்று இன்னும் நீங்கள் தெரிந்துகொள்ள வில்லையே? என் பெயர் சர்வோத்தமன்" என்றேன்.

"சர்வோத்தமனா...... நல்ல பெயர். இந்த மாதிரிப் பெயரெல்லாம் தான் எனக்குப் பிடிக்கும். எங்கள் இலாக்காவிலே புருஷோத்தமன் என்று ஒரு குட்டிக் கிளார்க்கு இருந்தான். ரொம்பத் தங்கமான பையன். நான் எவ்வளவு பேசினாலும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருப்பான். கடைசியில் அவன் அதிருஷ்டத்தைப் பாருங்கள். அவனுக்கு நல்ல இடத்திலே கல்யாணமாச்சு. அதோடு மட்டுமில்லை. மணி மணியாக ஆறு குழந்தைகள் வேறு அவனுக்குப் பிறந்தது..." எனக்கு அவரது பேச்சு நல்ல வேதனையாக இருந்தது.

"அப்படியா! நல்லவாளுக்கு எப்பொழுதும் நல்லது தான் சார் நடக்கும். கடைசியில் என்னை யாரென்று நீங்கள் தெரிஞ்சுக்கல்லையே? நான் ஒரு ரெடிமேடு ஏஜண்டு..." என்று அவரை இடைமறித்து நான் சொல்லிக் கொண்டு வரும்போது அவர் பொறுமை இழந்தார். என்னை அவர் இடை மறித்து, "ரெடிமேடு ஏஜண்டுன்னா? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே? இந்தக் காலத்திலே புரியாதபடி புதுப் புது உத்தியோகங்கள் எல்லாம் ஏற்படுகிறது. நான் கூட ரிடையரான பிறகு இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்டு ஆகலாமான்னு நினைச்சேன். வயதான காலத்திலே அலைய முடியாதுன்னு விட்டுட்டேன். அப்புறம் எங்கள் மாமா பிள்ளை கூட்டாகப் பருத்திக்கொட்டைவியாபாரம் செய்யலாம் வா வென்று கூப்பிட்டான். எனக்கு அதிலெல்லாம் இஷ்டமில்லை. வாழை வியாபாரம் செய்ய முயற்சி செய்தேன். அதாவது வாழை இலை, வாழைக்காய், வாழைப்பழம், வாழைப்பூ, வாழைத்தண்டு, எல்லாம். முக்கியமாய் இந்த வாழையிலே நன்மை என்னன்னா, அதிலே ஒன்றும் வீணாய்ப் போவதில்லை. எல்லாம் உபயோகப்பட்டுப் போயிடும். இலை காய்ந்தால் சருகு எத்தனை நாளைக்கு வேண்டுமானாலும் உபயோகிக்கலாம். மட்டை காய்ந்தால் பொடிப் பட்டைக்கு உபயோகப்படுகிறது. நல்ல ஆற்றோரப் படுகையிலே இரண்டு மா, வாழை பயிர் செய்தால் போதுமே? அதுவும் மொந்தன் வாழை நம்ம ஜில்லாவிலேயே பாபநாசம் தாலூக்காவிலே காவேரிக் கரையிலே சுந்தரப்பெருமாள் கோவில் சரகத்திலே அடாடா..." என்று கூறி அவர் மூச்சு விடும் நேரத்துக்குள் நான் பிடித்துக் கொண்டேன்.

"ஆமாமாம்! அந்தப் பக்கத்து மொந்தன் வாழையே பிரமாதம்தான். அது தான் கப்பல் கப்பலாக அமெரிக்காவுக்கு ஏற்றுமதியாகிறது. அதிருக்கட்டும். உங்கள்குளக்கரைத்தெரு வீட்டைப்பற்றினு நான் பேச வந்தேன்..." என்று நான் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவர் இடை மறித்து, "நான் அந்தக் கதையைத் தான் சொல்ல வந்தேன். நீங்கள் சாவகாசமாக ஒரு நாள் வைத்துக் கொள்ளலாம்னு சொன்னீர்களே. முதலில் துளசிராவ் கிட்டே அந்த வீட்டை விற்ற வரதராஜய்யர் அந்த வீட்டை விற்பதற்குப் பத்து வருஷத்துக்கு முன்னால் எப்படி இருந்தார், பத்து வருடத்துக்குள்ளே எப்படி ஆகிவிட்டார், தெரியுமா? அந்த மனிதர் ஆறு கல்யாணம் செய்து கொண்டார்......"



நான் சலிப்படைந்து விட்டேன். வரதராஜய்யர் செய்து கொண்ட ஆறு கல்யாணத்தையும் வரிசையாகச் சொல்லாமல் அவர் விட மாட்டார் போலிருந்தது. "அதிருக்கட்டும். அதெல்லாம் ஒரு நாள் சாவகாசமாய் இருக்கும் வேளையில் வந்து கேட்கணும். முக்கியமாக உங்கள் குளக்கரைத் தெரு வீடு பூட்டியிருக்கிறதே, அதை நீங்கள் வாடகைக்கு விடப் போகிறதாகக் கேள்விப்பட்டேன்" என்றேன்.

"வாடகைக்கா ... ஏற்கெனவே அந்த வீட்டில் முப்பது குடிகள் வரை இருந்து ஒவ்வொருவராகக் காலி செய்திருக்கிறார்கள். ஒருவரும் அங்கு நிலைத்து இருக்கிறதில்லை. சரியானபடி வாடகையும் செலுத்துவதில்லை. முதன் முதலில் அந்த வீட்டுக்குக் குடிவந்தவர் தாலூக்கா ஆபீஸ் ஹெட் கிளார்க் சகாதேவய்யர். அவருக்கு அப்புறம் லக்ஷ்மண ஐயர். ரொம்ப நல்ல மனுஷ்யர். அதற்கப்புறம்..."

"இருக்கட்டும். எத்தனையோ பேர் குடி வந்திருக்கலாம், போயிருக்கலாம். ஆனால் இப்போ நான் குடிவரலாமென்று நினைக்கிறேன். உங்களுக்கு அபிப்பிராயம் உண்டா...?" என்றேன் கண்டிப்பாக.

"அந்த வீடு வாங்கியதிலிருந்து ராசி இல்லை. அதை விற்றுவிடலாமா என்று..."

"வீட்டை விற்று விடப் போகிறீர்களா? கொஞ்ச நேரத்துக்கு முன்னால் நான் கேட்ட பொழுது 'நானு வீட்டை விற்பேன்?' என்று என்னிடம் கன கோபமாகப் பேசினீர்களே!"

"அதுவா ...... ஒருவர் வந்து வீட்டை விற்கப் போகிறீர்களா என்று கேட்டவுடனே 'ஆமாம்' என்று சொன்னால் ஏதோ தவறாக நினைச்சுடறு. இவனுக்குக் கடன் மிஞ்சிப் போயிடுத்து போயிருக்கு என்று. என்னுடைய உத்தேசமெல்லாம் என்னன்னு அந்த வீட்டை விற்று விட்டு வேறு ஒரு நல்ல வீடாய் வாங்கி இடித்துப் புதுசாய்க் கட்டலாம்ன்னு..."

புதுச்சேரி செல்லும் மார்க்கத்தில், காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ தேபர் அவர்களுக்கு ஜூலை மாதம் 16உ மாயூரம் சுந்தரம் டாக்கிஸில் அமோக வரவேற்பு அளிக்கப்பட்டது. மாயூரம் நகர சபையின் சார்பாகவும் பல காங்கிரஸ் கமிட்டிகளின் சார்பாகவும் வரவேற்புப் பத்திரங்கள் அளிக்கப்பட்டன. ஸ்ரீ தேபர் ஆங்கிலத்தில் பேசுவதை அமைச்சர் ஸ்ரீ பக்தவத்சலம் தமிழில் மொழிபெயர்க்கிறார்.

"பேஷாய்ச் செய்யலாம். உங்களுக்கு என்ன குறைச்சல்? உங்கள் யோக்கியதை என்ன...? அதிருக்கட்டும், அந்த வீட்டை விலைக்கு விற்கிறதுன்னு நீங்கள் எத்தனை எதிர்பார்க்கிறீர்கள்? உங்கள் மதிப்பு என்ன? அதை வாங்கச் சரியான 'பார்ட்டி' இருக்கிறார்கள். அதற்காகத்தான் முக்கியமாக நான் வந்தேன்..." என்றேன்.

வேங்கடாசலமய்யர் திகைப்படைந்தவராக, "முதலில் நீங்கள் குடி இருக்கணும் என்று சொன்னீர்களே?" என்றார்.

"என்ன செய்யறது? மனுஷ்யாளுக்குத் தகுந்தாப்பிலேதான் பேசி உள் வயணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கு. இதெல்லாம் தொழில் முறை. இந்தத் தொழில் அப்படி......"

"அப்படின்னா நீங்கள் தரகரா...?"

"ஆமாம். இந்த ஊரிலே எனக்குத் தெரியாமல் எந்த வீடோ நிலமோ ஒரு கையிலே யிருந்து இன்னொரு கைக்கு மாறாது. ஒருவரோடு அதிகமாக நெருங்கிப் பழகா விட்டாலும் எல்லோரையும் பற்றி எனக்குத் தெரியும். அவ்வளவு தெரிந்து கொள்ளா விட்டால் இந்தத் தொழிலில் பிழைக்க முடியாது..."

"நான் கேட்ட போது நீங்கள் ஏதோ ரெடிமேட் ஏஜண்டுன்னு சொன்னீர்களே.........?"

"வரும்போதே தரகர் என்று சொல்லிக் கொண்டு வந்தால் சில பேர் பயந்து விடுகிறார்கள்!......"

"அடேயப்பா...நீர் ரொம்ப சாமர்த்தியக்கார ஆசாமி ஐயா..."

"சாமர்த்தியம் இல்லாவிட்டால் இந்தத் தொழிலில் பிழைக்க முடியாது. உங்கள் சாமர்த்தியம் சாதாரணமா? இரண்டு மணி நேரம் உங்களோடு பேசின பிறகு நானே உள் வயணம் புரிந்து கொள்ள முடிந்தது. சரி, சாயங்காலம் 'பார்ட்டி'யை அழைத்துக் கொண்டு வரட்டுமா? என்ன விலைக்குக் கொடுக்கலாமென்று உங்கள் அபிப்பிராயம்?"

"நான் வாங்கும்போது ஐயாயிரத்துக்கு வாங்கினேன். அது அந்தக் காலம். அதற்கப்புறம் கொஞ்சம் கொஞ்சமாய் வீட்டைப் பழுது பார்த்ததிலே இரண்டாயிரம் செலவு ஆகியிருக்கிறது. மேலே ஒரு இரண்டாயிரத்தை வைத்து ஒன்பது ஆயிரத்துக்குத் தள்ளி விடப் பாருங்கள்."

"ஒன்பதாயிர மெல்லாம் போகாது. இப்பொழுதெல்லாம் வீட்டு விலை ரொம்ப இறக்கம். ஏழாயிரத்துக்கு முடிக்கலாம். உங்கள் நிர்ப்பந்தம் எனக்குத் தெரியும். கோதண்டராம செட்டியாருக்குக் கொடுக்க வேண்டிய கடன் ஐயாயிரத்தைத்தீர்த்துடணுமென்றுபார்க்கிறீர்கள்!"

வேங்கடாசலமய்யர் திகைத்துவிட்டார். "கோதண்டராம செட்டியாருக்கு நான் கடன் தரணுமா...? உங்களுக்கு யார் சொன்னது?" என்றார்.

"இந்தத் தரகர் வியாபாரம் செய்யறதுன்னு இதெல்லாம் அடிபட்டாகணும், அண்ணா! உலகத்திலே மனிதனாகப் பிறந்தவன் கடன் வாங்கறது சகஜம். இந்த ஊரிலே உங்களைப் போல அனேக பெரிய மனுஷ்யாளுக்கு என்னைப் பற்றித் தெரி

யாது. ஆனால் அவர்களை எல்லாம் பற்றி எனக்குத்தெரியும். நீங்கள் வாங்கின மற்ற கடன்கள் எப்படியிருந்தாலும் இப்போ இந்தக் கோதண்டராம செட்டியாரின் கடனை அடைக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது என்று எனக்குத் தெரியும். அது எப்படித் தெரியும் என்று கேட்காதீர்கள். அது தொழில் விஷயம்!"

"எப்படியோ இதைக் காதும் காதும் வைத்தாப்பலே கௌரவமாகச் செய்யணும்னுதான் பார்க்கிறேன்" என்றார் வேங்கடாசலமய்யர்.

"கவலைப்படாதீர்கள். எல்லாவற்றையும் காதும் காதும் வைச்சாப்பலேயே முடித்து விடுகிறேன். ஏழாயிரத்துக்கு உங்களுக்குச் சம்மதம் தானே...?" என்றேன் நான்.

"இன்னும் ஒரு ஐந்நூறுவது ஒட்டப் பாருங்கோ. ஒரு தினுசா முடிச்சுடுவோம்."

"கூடுமான வரையில் பார்க்கிறேன். சாயங்காலம் அந்த மனிதரை அழைத்துக் கொண்டு வருகிறேன். அந்த மனிதர் மிகவும் கண்டிப்பானவர். அனாவசியமான பேச்சுக்கே இடம் கொடுக்க மாட்டார். தயவு செய்து அவரிடம் நீங்கள் வரதராஜ ஐயரைப் பற்றியும் வாழைக்காயைப் பற்றியும் பேச ஆரம்பிக்காதீர்கள். காரியம் கெட்டுப் போய்விடும்..." என்றேன்.

"நீங்க சொல்கிறபடி கேட்கிறேன். எப்படியோ காரியத்தை நீங்கள் முடித்து வைத்தால்தான் என் கௌரவம் நிலைக்கும். இதெல்லாம்வெளியேதெரியவேண்டாம்!"

"துளிக்கூட வெளியே தெரிய விடமாட்டேன். கவலைப்படாதீங்கோ. நான் சாயங்காலம் அந்த மனிதரோடு வருகிறேன்" என்று சொல்லி விட்டு அவர் வீட்டிலிருந்து கிளம்பினேன்.

# படித்துப் பாருங்கள்

## முருகவேள் பன்னிருதிருமுறை

(திருப்புகழ் தொகுதி—4)

பாடும் பணியே பணியாகக் கொண்டு பன்னிருகையனுக்குப் பாமாலை புனைந்து சாத்திய பக்தர்களுக்குள் அருணகிரிநாதர் சிறந்தவர். அவர் இயற்றிய திருப்புகழ், லய சுத்தமும், சந்த இன்பமும், ஓசை நயமும் கொண்டு தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

மேற்படி பழம் பெரும் நூலுக்கு உரை எழுதும் பெரும் பணியைத் தணிகை மணி வ.சு. செங்கல்வராயப் பிள்ளையவர்கள் துவக்கி, இதுகாறும் மூன்று தொகுதிகள் வெளி வந்து விட்டன. இப்பொழுது நான்காவது தொகுதியும் வெளி வந்து விட்டது. இவ்வுரை தமிழ் வளத்துடன் பல மேற்கோட் செய்யுட்களையும் மரபுச் செய்திகளையும் கொண்டு சிறந்த முறையில் வெளி வந்திருக்கிறது. இவ்வரிய முயற்சிக்கு ஆஸ்திகர் உலகம் ஊக்கம் அளித்து ஆதரிக்க வேண்டியது கடமையாகும்.

பதிப்பாளர்: மீனாக்ஷி கல்யாணசுந்தரம், 2, வடக்கு கோபாலபுரம், இரண்டாம் தெரு, சென்னை — 6; விலை: ரூ. 9—8—0.

## பிரேமாஞ்சலி

ராஜகுமாரி திலகவதி ராஜகுருவின் புதல்வன் பரந்தாமனைக் காதலித்தாள்; நடன மங்கை பிரேமாவதியும் பரந்தாமனைக் காதலித்தாள்; ஆனால் பரந்தாமன் உள்ளத்தில் காதலுக்கு இடம் இருக்கவில்லை. இளவரசன் ராஜசேகர வர்மன், பிரேமாவதியின் நடனத் திறமையிலும் வனப்பிலும் ஈடுபட்டு அவளிடம் காதல் கொள்ளுகிறான். ஆஸ்தான கவிஞரின் குமாரனான ஆனந்தன் ராஜகுமாரியைக் காதலித்தான். இப்படியே ஒருவரையொருவர் காதலித்துக் கொண்டே காலந் தள்ளிவிட முடியுமானால் கதை அமைதியாக முடிந்திருக்கும். முதலில் காதல், பிறகு சந்தேகம், அப்புறம் குழப்பம், குழப்பத்திலிருந்து விபரீதம், விபரீதத்துக்குப் பிறகு அமைதி— இப்படி இந்தக் கதை செல்லுகிறது. ஒரே காதல் மயமான இக்கதையின் முடிவைத் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்கள் புத்தகத்தைக் கடைசி வரையில் படித்துத் தானாக வேண்டும். அவ்வளவு சமத்காரமாகப் புனைந்திருக்கிறார் ஆசிரியர். படிப்பதற்கு நடை விறுவிறுப்பாக யிருக்கிறது. விலை: ரூ. 2—4—0.

## ஊதிய விளக்கு

"கண்ணைப் பறிக்கும் வண்ணம் அவள் அலங்கரித்துக் கொண்டிருக்கவில்லை. நீல நிற மில் துணிப் புடவை; வெளிர் ரோஜா வர்ண ரவிக்கையின் ரமணீகரம்; காதில் சாதாரண சிவப்புக்கல் தோடு; மூக்கில் ஒற்றைக்கல் புஷ்பராக மூக்குத்தி; கழுத்தில் சங்கு மணி மாலை; நெற்றியில் குங்குமப் பொட்டு. இந்த அலங்காரம் சிலருக்குப் பிடிக்காமலிருக்கலாம். ஆனால், என் மனசுக்கு மிகவும் பிடித்திருந்தது..." என்று ஆசிரியர் "ஊதிய விளக்கு" என்னும் கதையில் கிரிஜாவை நம் மனக் கண் முன்னால் கொண்டு வந்து நிறுத்துகிறார். முதலில், ஓர் அரிய சந்தர்ப்பத்தில் அவன் விளக்கை ஊதி அணைக்கிறான். இன்னொரு நெருக்கடியான நிலைமையில் அவள் விளக்கை ஊதி அணைக்கிறாள். அதுவே அந்தச் சிறுகதையின் அடிநாதமாய் அமைந்து, தளிர் விட்டு, உயர்ந்து, படர்ந்து ஒரு முழுக் கதையாகி விடுகிறது. இத் தொகுதியில் ஆறு சிறுகதைகள் அடங்கி யிருக்கின்றன. ஒவ்வொரு கதையும் ஒரு சுவையை அடிப்படையாகக் கொண்டு சுவாரஸ்யமாகச் செல்லுகிறது. விலை: ரூ 1-8-0.

இரு நூல்களையும் எழுதியவர்: லோகநாதன், கிடைக்குமிடம்: நவலக்ஷ்மி புத்தகசாலை, 136; செட்டியார் தெரு, கொழும்பு. —"விஜயம்"

# மேலும் மலிவானது!

PROTEX
All-Purpose
TOILET POWDER

## குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்

ரம்மியமணம் கொண்ட ப்ரோடெக்ஸ் உயர்ந்தரக சர்வ பிரயோக வாசனைப் பௌடர்; மிக மிகக் குறைந்த விலையில் மிக மிகப் பெரிய டப்பா! இந்தியா வெங்கும் ஆயிரக்கணக்கான குடும்பங்கள் ப்ரோடெக்ஸ் டால்கம் பௌடரைவிரும்புகின்றன—அதன் வசீகரமான வாசனையினாலும் எல்லாவற்றிற்கும் உபயோகப்படும் பரிமள டால்கம் பௌடர் என்பதனாலும்......

### இன்று ப்ரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?

குணம் உத்தரவாதம்
கால்கேட் பாமாலிவ்
அளிக்கிறது




# ப்ரோடெக்ஸ்
## சர்வப்பிரயோக
## வாசனைப்பௌடர்

# ஹாஸ்யக் களஞ்சியம்








"போ! நான் ரோடில் தர்மம் செய்யும் வழக்கம் கிடையாது."

"அப்பொழுது வீட்டில் வந்து செய்யுங்கள்! என் வீடு அதோ தான் இருக்கிறது."










"இந்தாடா விச்சு! வா இப்படி.
டாக்டரைச் சந்திக்கும்
இடமெல்லாம் அவரிடம் நாக்கைக்
காட்ட வேண்டிய அவசியம்
இல்லை."


"1904ல் என் கூட நீங்கள்
இருந்திருக்கணும்!"
"நான் 1916ல் தான் பிறந்தேன்"
"தெரியுமே, நீங்கள் எப்பொழுதுமே
'லேட்' பேர்வழியாச்சே; சமயத்
துக்கு இருக்க மாட்டேளே."

சாமா


அவர் எதைவேணுமானாலும்
சொல்லட்டும் நீங்கள்
காதில் வாங்கிக் கொள்ள
வேண்டாம்
என்ன?


அவர் சொல்வதை
காதில் வாங்கிக்
கொள்ளாதீர்கள்!
சரி!


என்ன சொன்னேள்?
சரி: சரி
என்றேன்


கார்ட்டூன்
சித்திரக்
கண்காட்சி
நான், சித்திரத்தில்
எழுதினமாதிரி
இருக்கிறேன் என்று
நீங்கள் சொல்லி-
-யது, பரிகாசம் தானே!


நன்றாக இருக்கு! காதுக்குப் பல்
தேய்த்தால் கட்டு
படியாகுமா?

லொக்
லொக்
லொக்
லொக்

அச்சூ!

லொக்
லொக்
லொக்
லொக்

அச்சூ!

லொக்
லொக்
லொக்
லொக்

அச்சூ!

# அதை நிறுத்துங்கள்!

பெர்டுஸின் டெஷ்னரை உட்கொண்டு அந்த இருமலை நிறுத்துங்கள். 60 வருஷகாலமாக பெர்டுஸின் இருமலுக்கு ஓர் கைகண்ட ஔஷதமாக விளங்கிவருகிறது. கக்குவான் இருமல் உள்பட எல்லாவித இருமல்களையும் யாதொரு கொடுதியுமின்றி நொடியில் நிறுத்துகிறது. இன்றே பெர்டுஷின் வாங்குங்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது

இடாபா லிமிடெட், ஷான், லீஷென்ஸ்டீன் ஸ்விஸ் கஸ்டம் அண்ட் இகனமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில் இன்பா லிமிடெட். தபால் பெட்டி 1041, பம்பாய்-1, இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

ILY-12-TAM

பாப்பா மலர் தொடர்கதை

# பர்மா ரமணி

அழ. வள்ளியப்பா

## 3. அவன் யார்?

உடனே துரைசாமி முதலாளி அறைக்குள் ஓடிப் போய் அங்கே மேஜை மேல் இருந்த பொட்டலத்தை எடுத்து வந்தான். "இதோ இந்தப் பொட்டலம்தான்!" என்று கூறி மதுரநாயகத்திடம் அந்தப் பொட்டலத்தை நீட்டினான்.

மதுரநாயகம் அதைக் கையிலே வாங்கினார். அவசர அவசரமாகப் பிரித்துப் பார்த்தார். உள்ளே இருந்ததைக் கண்டதும், "ஆ! துருவனுக்கு இடுப்பிலே கட்டுவதற்காக வாங்கியதல்லவா இந்தப் பட்டுத் துணி! இதையா ரமணி எடுத்தான் என்கிறீர்கள்?" என்று திகைப்புடன் கேட்டார் மதுரநாயகம்.

"ஆமாம், 'கெஜம் பன்னிரண்டு ரூபாய். மூன்று கெஜம் முப்பத்தாறு ரூபாய்' என்று சொல்லி இன்று காலையில் வாங்கி வந்தீர்களே! இதே துணியைத்தான் இவன் திருடியிருக்கிறான். இன்னும் கொஞ்ச நாளிலே இங்குள்ள சாமான்கள் எல்லாவற்றையுமே விற்று விடுவான். கடைசியில், இந்த நாடக சபாவையே விலை பேசி விடுவான்" என்றார் மோகனரங்கம்.

"ஐயா! இதை ரமணி எடுத்திருப்பான் என்பது சந்தேகமாகத்தான் இருக்கிறது..."

"என்ன! இன்னுமா சந்தேகம்? மதுரநாயகம், உங்களுக்கு வெளுத்ததெல்லாம் பால்தான்! இந்த மாதிரிப் பயல்களுக்குத் தஞ்சம் கொடுப்பதே மகாப் பாவம்! இவன் நமது நாடகங்களிலே நடிப்பவர்களைப் பார்த்துப் பார்த்து நல்லவன் போல் நடித்திருக்கிறான். சுத்த ஆஷாடபூதி!" என்று கத்தினார்.

"நீங்கள் சொல்வதை என்னால் நம்ப முடியவில்லையே!"

"என்ன! நம்பவே முடியவில்லையா? சரிதான், ஜோஸ்யம், ஆருடம் பார்த்துத்தான் நம்ப வேண்டும் போலிருக்கிறது. இவன் பொட்டலத்தில் என்ன வைத்திருக்கிறான் என்பது துரைசாமிக்கு அப்போது தெரியுமா? பொட்டலத்தைக்கூட அவனாக எடுத்துக் கொண்டு வரவில்லையே! நான் எடுக்கச் சொன்ன பிறகுதானே எடுத்தான்! கையும் களவுமாக அகப்பட்ட பிறகும் நம்ப முடியவில்லை என்கிறீர்களே!"

"ரமணி இதுவரை இப்படி நடந்து கொண்டதே இல்லையே!"

"நமக்குத் தெரியாமல் அவன் என்னென்ன செய்திருக்கிறானோ! இந்த 'நல்ல பிள்ளை'க்கு நீங்கள் வீட்டில் வேளா வேளைக்குச் சாப்பாடு போடுகிறீர்கள். சபாவிலும் மாதம் பத்து ரூபாய் சம்பளம் போட்டுக் கொடுக்கிறோம். இவை போதாதென்று பட்டுத் துணி வியாபாரத்தில் வேறு இறங்கி விட்டான். சுத்த அயோக்கியப் பயல்! நீட்டின மரத்திலே பதம் பார்க்கிறான்!" என்று கூறிக் கொண்டே ரமணியை முறைத்துப் பார்த்தார் மோகனரங்கம்.

"ஐயா, கொஞ்சம் தயவு செய்து வாருங்கள். உங்கள் அறைக்குச் சென்று தனியாகப் பேசலாம்" என்று கூறி அவரை அறைக்குள்ளே அழைத்துச் சென்றார். இருவரும் அங்குள்ள நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள்.

"ரமணி இதுவரை ஒரு சிறு தவறு கூடச் செய்ததில்லை. தீர ஆராயாமல் அவனுக்கு நாம் திருட்டுப்பட்டம் கட்டி விடக் கூடாது...." என்று மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தார் மதுரநாயகம்.

இதைக் கேட்டதும் முதலாளி மோகனரங்கத்துக்குக் கோபம் அபாரமாக வந்து விட்டது. அவர் மொத்தத்தில் நல்லவர்தான். ஆனாலும், சில வேளையில் — அதாவது சில சில சந்தர்ப்பங்களில், கோபக்காரராக மாறி விடுவார். அப்போது யார் எப்படிச் சொன்னாலும் அவர் கேட்க மாட்டார்.

"என்ன இது! ஒரு அனாதைப் பயல்! அவனுக்குப் பரிந்து கொண்டு பேசுகிறீர்களே! அப்படியானால், நான் பொய் சொல்லுகிறேன், இல்லையா? இனி இதைப் பற்றி என்னிடம் எதுவும் பேச வேண்டாம். அவனை இப்போதே 'கல்தா' கொடுத்து வெளியே அனுப்பப் போகிறேன்" என்று கத்திக் கொண்டே எழுந்து விட்டார் மோகனரங்கம்.

"ஒன்றிரண்டு நாள் பொறுத்துப் பார்க்கலாமே?" என்று கொஞ்சம் தயக்கத்தோடு கூறினார் மதுரநாயகம்.

"அதெல்லாம் இல்லை. வேண்டுமானால், உங்கள் வீட்டில் தாராளமாக வைத்துக் கொள்ளுங்கள். இங்கே அவனை ஒரு நிமிஷம் கூட வைத்துக் கொள்ள முடியாது. இந்நேரம் அவனைப் பிடித்துப் போலீஸில் ஒப்படைத்திருப்பேன். உங்களுக்காகத்தான் இந்த அள

வோடு விடுகிறேன்" என்று இரைந்து கொண்டே அறையை விட்டு மோகனரங்கம் வெளியே வந்தார். மதுரநாயகமும் கவலையோடு எழுந்து அவரைத் தொடர்ந்து வெளியே வந்தார்.

"டேய் ரமணி, இந்த நிமிஷமே நீ இந்த இடத்தை விட்டு ஓடிப்போய்விட வேண்டும். இது என் கண்டிப்பான உத்தரவு....உம்....நிற்காதே! போ!" என்றார் மோகனரங்கம்.

ரமணி தயக்கத்துடன் மதுரநாயகத்தின் முகத்தைப் பார்த்தான்.

"டேய், என்னடா விழிக்கிறாய்? போடா என்றால் போக மாட்டாய்?" என்று கேட்டுக் கொண்டே அவன் அருகிலே வேகமாக வந்தார் மோகனரங்கம். கழுத்திலே கையை வைத்துப் 'பர பர' வென்று வாசலை நோக்கித் தள்ளிக் கொண்டே போனார். வெளியே அவனை விட்டு விட்டுத் தான் உள்ளே திரும்பி வந்தார். திரும்பி வரும் போது, அங்கே ஒரு நாற்காலியில் தொங்கிக் கொண்டிருந்த ரமணியின் சட்டை அவரது கண்களில் பட்டது. உடனே அதை எடுத்துக்கொண்டு வாசலுக்குச் சென்றார். "இந்தா உன் சட்டை, இது எதற்கு இங்கே?" என்று கூறி ரமணியின் முகத்தில் எறிந்தார்.



இந்தக் காட்சியைக் கண்டதும் மதுரநாயகத்துக்குத் தலை சுற்றியது. துக்கம் மேலிட்டது. பேசாமல் தம்முடைய அறைக்குள்ளே சென்றார். 'பொத்'தென்று நாற்காலியில் சாய்ந்தார். யோசனையில் ஆழ்ந்தார். அப்போது ஆறு மாதங்களுக்கு முன்பு நடந்த ஒரு சம்பவம் அவரது நினைவுக்கு வந்தது.

ஆறு மாதங்களுக்கு முன்பு அப்படி என்னதான் நடந்தது?

அன்று இரவு மதுரநாயகம் எழும்பூர் ஸ்டேஷனுக்குச் சென்றிருந்தார். திருச்சியிலிருந்து வந்திருந்த அவருடைய அத்தானை (அக்காளின் கணவர்) வழியனுப்பத்தான் சென்றிருந்தார். 9-40க்குப் புறப்படும் தூத்துக்குடி எக்ஸ்பிரஸில் அவரை அனுப்பி விட்டு, ஸ்டேஷனுக்கு வெளியே வந்தார். பஸ்ஸிற்காகக் காத்து நின்றார்.

ஐந்து நிமிஷம் ஆயிற்று; பத்து நிமிஷமாயிற்று; பதினைந்து நிமிஷங்களும் பறந்தோடி விட்டன. ஆனாலும், பஸ்தான் ஓடி வரவில்லை! அப்போது "டர்டர்......டர்டர்" என்ற 'இன்னிசை' யுடன் ஓர் ஆட்டோ ரிக்ஷா அங்கு வந்தது. மதுர நாயகத்தின் முன்னால் 'டர்ர்...' என்ற சத்தத்துடன் வட்டமிட ஆரம்பித்தான் ஆட்டோ ரிக்ஷாக்காரன்! அவன் தந்திரம் பலிக்காமல் போகவில்லை!

"மணியோ பத்துக்கு மேலாகிறது. இனியும் நின்றால் நேரம் வீணாகும். ஆதலால், இந்த ஆட்டோ ரிக்ஷாவிலே போய்விடலாம்" என்று தீர்மானித்து ஆட்டோ ரிக்ஷாவை அழைத்து, அதிலே ஏறி உட்கார்ந்து கொண்டு, "தங்கசாலைக்குப் போ" என்றார். கர்ண கடூர சத்தத்துடன் அது புறப்பட்டது. எதிரில் இருக்கும் உயரமான ரயில் பாலத்தில் ஏறியது. சுமார் ஐம்பது அடி தூரம் கூடப் போயிருக்காது.

அப்போது—

"ஆ! ஐயோ! ஐயையோ!" என்ற கூக்குரல் கேட்டது. சத்தத்தைக்கேட்டதும், மதுரநாயகம் திடுக்கிட்டார். எதிரே பார்த்தார். அங்கே மனிதன் இழுக்கும் ஒரு ரிக்ஷா மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கிப் பின்புறமாக ஓடி வந்துகொண்டிருந்தது. அதை இழுத்துச் சென்ற ரிக்ஷாக்காரன் அதைக் கைவிட்டு விட்டான் என்பதை மதுரநாயகம் உடனே புரிந்து கொண்டார். ரிக்ஷாவுக்குள் இருப்பவர் தான் கூக்குரல் போடுகிறார் என்பதையும் அவர் அறிந்து கொண்டார்.

உடனே அவர், "ஏய்! ஏய்! நிறுத்தப்பா, நிறுத்து!" என்று பரபரப்புடன் கூறி ஆட்டோ ரிக்ஷாக்காரனின் முதுகிலே பலமாகத் தட்டினார். உடனே அவன் நிறுத்தினான்.

மதுரநாயகம் கீழே இறங்குவதற்குள் பின்னோக்கி வந்த அந்த ரிக்ஷா சரிவிலே வெகு வேகமாக ஓடியது. அதைத்

# சிறுவர்கள் சித்திரப்போட்டி










தொடர்ந்து ரிக்ஷாக்காரனும் ஓடினான். ஆனாலும், அவனால் ரிக்ஷாவைப் பிடித்து இழுத்து நிறுத்த முடியவில்லை!

சிறிது தூரம் சென்றதும், தலை குப்புறக் கவிழ்ந்தது அந்த ரிக்ஷா! அதிலிருந்து ஒரு குண்டு மனிதர் 'அம்மாடியோவ்!' என்று கதறிக் கொண்டே கீழே சாய்ந்தார். மறு நிமிஷம், ஓடி வந்த ரிக்ஷாக்காரன் அவர் அருகே சென்றான். "ஐயையோ! அடிபட்டு விட்டதா! எந்த இடத்திலே அடி? என்னை மன்னிக்க வேண்டும்" என்று கூறிக்கொண்டே அவரது உடம்பைத் தொட்டுப் பார்த்தான்.

இதற்குள் மதுரநாயகம் அங்கே வந்து விட்டார். அவர் மட்டும் வரவில்லை; ஒரு சிறு கூட்டமே வந்து விட்டது. ஒரு போலீஸ்காரரும் அங்கே வந்து சேர்ந்தார். அந்தப் போலீஸ்காரர் கூட்டத்துக்குள்ளே புகுந்தார். அங்கே நின்ற ரிக்ஷாக்காரனைக் காதைப் பிடித்து இழுத்துச் சென்றார். பக்கத்திலே இருந்த 'மெர்க்குரி' விளக்கின் அடியிலே கொண்டு போய் நிறுத்தினார். கூட்டமும் அங்கே வந்தது.

மதுரநாயகம் கீழே விழுந்த கனத்த மனிதரை மெதுவாகத் தூக்கி விட்டு, "அடி பலமோ?" என்று கேட்டார்.

"நல்ல காலம்; அடி எதுவும் இல்லாமல் தப்பினேன். ஜீவன் செத்த பயல்களெல்லாம் ரிக்ஷா இழுக்க வந்து விட்டான்கள்!" என்று அந்தக் குண்டு மனிதர் ஆத்திரத்துடன் சொன்னார்.

"சரி, வாருங்கள். அந்த ரிக்ஷாக்காரனை என்ன செய்கிறார்கள்; பார்க்கலாம்" என்று கூறி அவரையும் அழைத்துக் கொண்டு ரிக்ஷாக்காரன் நின்ற இடத்துக்கு வெகு வேகமாகச் சென்றார் மதுரநாயகம்.

அங்கே போலீஸ்காரரின் எதிரே விளக்கு வெளிச்சத்தில் நின்ற ரிக்ஷாக்காரனைக் கண்டதும், மதுரநாயகம் திடுக்கிட்டார். அவர் மட்டும் தானா திடுக்கிட்டார்? அங்கு நின்ற எல்லோருமே — போலீஸ்காரர் உள்பட அனைவருமே திடுக்கிட்டார்கள். ஏன்? அவன் யார்?

(தொடரும்)

(1) வி. கே. வேணுகோபாலன், வயது 11. காலிப்பாட், ஒலைக் கோடு. (2) ந. சரவணன், வயது 6, சி. பழஞ்சாலியத் தெரு, சிதம்பரம். (3) வெ. சுப்பிரமணியம், வயது 11½. 17/19. குறுந்த மாவத்தை, கொழும்பு—13.



# ரவிசந்திரிகா

## 16. புன்னாகவராளி

கல்யாணியின் அறைக்குள் ரவீந்திரன், ராமநாதன், அப்புலிங்கம் — மூவரையும் அழைத்துக்கொண்டு டாக்டர் சென்றபோது, அங்கே நர்ஸும் கல்யாணி அம்மாளும் இருந்த மாதிரியைப் பார்த்தால் அப்பொழுதே அந்த அறையைக் காலி செய்வதற்குத் தயாராக இருக்கது போலத் தோன்றிற்று.

"என்ன கல்யாணி! உடம்பு எப்படியிருக்கிறது?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்த ரவீந்திரன், இதைக் கண்டு மிகவும் ஆச்சரியப் பட்டான்.

"எனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை என்று சொல்லுகிறார்கள். நான் ஏன் இங்கு ஆஸ்பத்திரியில் வீணாகத் தனியே இருக்கவேண்டும்?" என்று கேட்டாள் கல்யாணி.

ரவீந்திரனுக்கு இந்த வார்த்தைகள் குழப்பத்தைக் கொடுத்தன. 'கல்யாணி ஏன் இப்படிச் சொல்லுகிறாள்? சந்திரிகாவும் தானும் தாயுமானவர் தெருவிலே தனிமையில் இருப்பது அவளுக்கு விபரீதமாகப் படுகிறது போலும்! அங்கே நேற்று ஒரு நாள் இரவில் நடந்த சம்பவங்கள் இவளுக்கு என்ன தெரியும்?' என்று எண்ணியவனாய் மௌனமாக நின்றான் ரவீந்திரன்.

கல்யாணி தொடர்ந்து சொன்னாள்:

"கொஞ்ச நேரத்துக்கு முன்னால் நாகரத்தினம் இங்கு வந்தாள். என்னுடைய வசவும் பாக்கியிருந்தது. அதை வாங்கிக்கொண்டு போயிருக்கிறாள் இப்பொழுது!"

'நாகரத்தினம்' என்ற சொல்லைக் கேட்டதும் பாம்பாகப் படம் எடுத்து நின்றான் ரவீந்திரன். டாக்டர் அதைப் புரிந்து கொண்டு விட்டார்.

"மிஸ்டர் ரவி! வீட்டுக்குப் போன பிறகு மனைவியிடம் சாவகாசமாகக் கேளுங்கள், என்ன நடந்தது என்று! எதைப் பற்றியும் ஆத்திரத்தோடு நடந்து கொள்ளாதீர்கள். இப்படி நான் சொல்வதற்காக நீங்கள் என்பேரில் கோபப்பட்டு விடாதீர்கள். உண்மையைச் சொல்கிறேன், இந்த உலகில் நான் இதுவரை வேறு யாரிடமும் இத்தனை பாசம் கொண்டதில்லை. உங்களைப் பார்த்து உங்களுடைய இதய அந்தரங்கங்களைத் தெரிந்து கொண்ட பிறகு எனக்கு உங்களிடம் விவரிக்க முடியாத ஒரு வாஞ்சை ஏற்பட்டு விட்டது. அதை யாராலும் இனி மாற்ற முடியாது. உங்களால்கூட முடியாது!" என்றார் டாக்டர் சுரேஷ்.

டாக்டர் சொன்ன அந்த வார்த்தைகளிலே அத்தனை பொருளும் உண்மையும் இருந்தன என்பதை யாரும் அப்பொழுது எண்ணிப் பார்க்கவில்லை. பின்னால், எத்தனையோ நாட்களுக்குப் பிறகு ராமநாதன் அந்த வார்த்தைகளை எண்ணி எண்ணி வியந்தது உண்டு. அன்பு என்ற சக்தியின் இரகசியத்தை, அதன் காரண காரியங்களை ஆராய்வதற்கு வேண்டிய பல சம்பவங்கள் தில்லி நகரத்திலே நடந்தன. அப்பொழுதெல்லாம் டாக்டர் சுரேஷும் அவருடைய இந்த வார்த்தைகளுந்தான் ராமநாதனுக்கு நினைவு வரும்!

ரவீந்திரனையும் கல்யாணியையும் தாயுமானவர் தெருவுக்கு அனுப்பி விட்டு டாக்டர் சுரேஷ், அப்புலிங்கத்தையும் ராமநாதனையும் தம்மோடு அழைத்துக் கொண்டு தமது பங்களாவுக்குச் சென்றார்.

"என்னுடைய சமையற்காரனுக்குத் தென்காசிப் பக்கம் சொந்த ஊர். புகழ் பெற்ற திருநெல்வேலித் தோசை எங்கள் வீட்டிலே கிடைக்கும். என்னோடு வாருங்கள். என் மனைவி ஊருக்குப் போனதிலிருந்து வீடே வெறிச்சென்றிருக்கிறது. இன்றைக்கு ஒருநாள்தான் என்னோடு இருந்து இரண்டு பேரும் தோசை சாப்பிடுங்களேன்!" என்று அன்போடு அழைத்தார் டாக்டர்.




அப்பொழுது காலை ஒன்பது மணிக்கு மேல் இருக்கும். டாக்டருக்கு இந்த மாதிரி இரண்டுங் கெட்டான் நேரத்தில் எல்லாம் சாப்பிட்டுப் பழக்கமாகி விட்டது! ராமநாதனுக்கோ அந்த நேரத்தில் தோசை சாப்பிட எப்படியோ இருந்தது. யோசித்தான். ஆனால் அவன் பதில் சொல்லுவதற்குள் அப்புலிங்கம் முந்திக் கொண்டு விட்டான்.

"திருநெல்வேலித் தோசை யென்றால் யோசனை என்ன! பேஷாகச் சாப்பிடுவோம்!" என்று உற்சாகமாகச் சொன்னான் அப்புலிங்கம்.

"மிளகாய்ப் பொடியும் நல்லெண்ணெயும் பிரமாதமாக இருக்கும் மிஸ்டர் ராமநாதன்! யோசியாதீர்கள்!" என்றார் டாக்டர். அவருக்கு நல்ல பசி. காலையில் ரவீந்திரன் வீட்டிலிருந்து டாக்ஸியிலே பங்களாவுக்குத் திரும்பியவர், 'விறு விறு' என்று குளித்துவிட்டு வெறும் காப்பியைச் சாப்பிட்டுவிட்டு ஆஸ்பத்திரிக்குச் சென்றிருக்கிறார்! பசிக்குச் சொல்லவா வேண்டும்!

மூவரும் தோசை சாப்பிட்டு விட்டு, மாடி அறையிலே வந்து நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள்.

"தோசை பிரமாதம்!" என்றான் அப்புலிங்கம். சங்கீதத்தை அநுபவித்து அநுபவித்துப் பழகிப் போன ரசிகன் அவன். எதையும் சுவையோடு உட்கொண்டு பாராட்டிப் பேசுகிற பண்பு அவனுக்கு! ராமநாதனுக்கோ மனம் அங்கே இல்லை! நாகரத்தினத்தையே சுற்றிச் சுழன்று கொண்டிருந்தது அவனுடைய சிந்தனை முழுதும்!

"ரவீந்திரனிடம் எனக்கு உண்மையிலேயே ஒரு பாசம் ஏற்பட்டு விட்டது! தங்கமான மனிதன்!" என்று பேச்சை ஆரம்பித்தார் டாக்டர் சுரேஷ்.

"ரொம்ப சரி, டாக்டர். எனக்கும் அவனை ரொம்பவும் பிடித்திருக்கிறது. அவனைச் சந்தித்ததே ஒரு ரஸமான சம்பவம்!" என்றான் அப்புலிங்கம்.

"அப்படியா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டார் டாக்டர். அதன்பேரில் லேவாதேவிக் கடையிலே புல்லாங்குழலை அடகு வைக்க வந்தானே ரவீந்திரன், அந்தச் சம்பவத்தை டாக்டர் சுரேஷுக்குச் சொன்னான் அப்புலிங்கம்.

"அப்படியானால், ரவீந்திரனுடைய புல்லாங்குழல் உங்களிடமா இருக்கிறது! அட பாவமே!" என்று அநுதாபத்தோடு சொன்னார் டாக்டர்.

"ஆமாம் டாக்டர்! அதை இப்பொழுது திரும்பக் கொண்டு போய்க் கொடுத்தால், வாங்கிக் கொள்ளக்கூட மாட்டான் ரவீந்திரன்! மல் யுத்தத்துக்கே வந்து விடுவான்!" என்று பேச்சிலே தானும் சேர்ந்து கொண்டான் ராமநாதன்.

"ஆமாம், டாக்டர்! கடனாக வாங்கிய தொகையைத் திரும்பக் கொண்டு வந்து கொடுத்து விட்டுத்தான் புல்லாங்குழலை வாங்கிக் கொள்வானாம்! அதுவரை அந்தப் புல்லாங்குழல் என்னிடம் அடகாக இருக்க வேண்டும் என்று எத்தனை கண்டிப்போடு பேசினான் தெரியுமா!" என்று ஒரே வியப்பாக டாக்டரிடம் சொன்னான் அப்புலிங்கம்.

"மனச்சான்று என்று ஒன்று இருந்து கொண்டு அவனை வேதனை செய்கிறது! பாவம்! எத்தனையோ பணக் கஷ்டம் அவனுக்கு இருக்க வேண்டும்! ஆனால் அதை வெளியே காண்பித்துக் கொள்ள வெட்கப்படுகிறான் என்று தெரிகிறது!" என்றார் டாக்டர். ராமநாதனுக்கு இந்த வார்த்தைகளைக் கேட்டதும் உடம்பு சிலிர்த்தது. சொன்னான்:

"உண்மையான வார்த்தை, டாக்டர். எத்தனையோ பேர் அவனிடம் தங்கள் கஷ்டங்களைச் சொல்லி அவனை ஏமாற்றிப் பணம் வாங்கிக் கொண்டு போவதை நானே பார்த்திருக்கிறேன். தனக்கு இல்லையென்றால்கூட இன்னொருவரிடம் கடன் வாங்கியாவது கொடுத்து விடுவான். நெருங்கிப் பழகினவர்களுக்குத்தான் அவனுடைய இந்த சுபாவம் தெரியும்!" என்றான் ராமநாதன். டாக்டர் சொன்னார்:

"அது எனக்குத் தெரியாது. ஆனால் பணச் செழிப்பு அறவே இல்லை! கல்யாணி அம்மாளுடைய கழுத்தைக் கவனித்தேன். மாங்கல்யத்தைத் தவிர ஒன்றையும் காணோம்! பாவம்!" என்றார் டாக்டர். ராமநாதனுக்கு இதைக் கேட்கவே கஷ்டமாக இருந்தது.

"தொழிலே இல்லாதபோது ஏற்பட்ட பழைய கடன்களை ஒவ்வொன்றாகத் தீர்ப்பதற்கே இன்னும் பல வருஷங்கள் இவர் சம்பாதித்தாக வேண்டுமாம். ரவீந்திரனுடைய மாமனார் வருத்தப்பட்டுச் சொல்லிக் கொண்டிருந்ததாக எங்கள் அப்பா சொன்னார்கள், டாக்டர்!" என்றான் அப்புலிங்கம்.



ரவீந்திரனுடைய வாழ்க்கையின் சுக துக்கங்களைப் பற்றிப் பேச்சு நடந்தது. திடீரென்று ராமநாதன் கேட்டான்:

"சந்திரிகாவுக்கும் ரவீந்திரனுக்கும் உள்ள பாசத்தைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் டாக்டர்? நீங்கள்தான் எதையும் நன்றாக நினைத்துப் பார்த்து முடிவு சொல்பவர் ஆயிற்றே!"

"நான் நினைப்பதற்கு ஒன்றும் இல்லை! அதைப் பற்றி ரவீந்திரனுக்கு எத்தனை தெரியுமோ அத்தனை எனக்கும் தெரியும்!" என்றார் சுரேஷ்.

"அப்படி யென்றால்?..." என்று ஆவலோடு கேட்டான் அப்புலிங்கம்.

"அந்த விஷயத்தைப் பற்றி இன்னொரு சந்தர்ப்பத்திலே பேசிக் கொள்ளுவோம்! இப்படியெல்லாம் அவசரத்தில் பேசி முடிவு கட்டி விடக்கூடிய காரியமில்லை அது!" என்று சொல்லிக் கொண்டே

நாற்காலியை விட்டு எழுந்தார் டாக்டர். மனம் வேறு ஏதோ ஒரு யோசனையில் ஆழ்ந்ததுபோலத் தோன்றியது.

"என்னோடு கடைத்தெரு வரைக்கும் நீங்கள் வந்தால் நல்லது. ஒரு முக்கியமான சாமான் வாங்க வேண்டும். காரிலே போய்விட்டு உடனே திரும்பி விடலாம். அதன் பிறகு அப்புலிங்கமும் தம்முடைய தகப்பனாரையும் தாயாரையும் ஆஸ்பத்திரியிலிருந்து அழைத்துக் கொண்டு போகலாம். என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார் சுரேஷ். அவர் கேட்ட விதம் யாருமே அதற்கு மறுத்துச் சொல்ல முடியாதபடி இருந்தது!

மூவரும் எழுந்தார்கள்.

* * *

அப்பொழுது மாலை ஆறு மணியிருக்கும். தெரு வாசலில் கோலம் போட்டுவிட்டு, ரவீந்திரனுடைய அறையிலே தொங்கும் வெண்கலத் தகளி விளக்கிலே எண்ணெய் ஊற்றித் திரி ஏற்றி விட்டுப் பூஜை அறையிலேயிருந்த குத்து விளக்குக்குக் குங்குமம் இட்டு, நித்திய வழக்கப்படி தீபலக்ஷ்மிக்குப் பூஜை செய்யச் சென்றாள் கல்யாணி.

"தாயே! உன்னைக் கையெடுத்ததற்கு ஒரு குறையும் வராது. அம்மா! எவ்வளவோ பெரிய விபத்து எப்படியோ நீங்கிற்று. அவர் என்னிடம் எப்படி வேண்டுமானாலும் கோபப்படட்டும். என்னை இம்சை செய்யட்டும். கவலையில்லை. ஆனால் அவருக்கு ஒரு கஷ்டமும் நேரக் கூடாது, தாயே! அவருடைய மனசில் குழப்பம் ஏற்படாதவாறு நடந்துகொள்ளும்படி எனக்குப் பொறுமையைக் கொடு. அம்பிகே! தீபலக்ஷ்மி!" என்று கல்யாணி அவளுடைய உள்ளத்தில் தோன்றிய எண்ணங்களையெல்லாம் சொல்லிப் பிரார்த்திக்கலானாள். அப்பொழுது வெளியே யாரோ ஒரு பையன் வந்து ஒரு நீளமான சிறு பெட்டியையும் ஒரு கடிதத்தையும் கொண்டு ரவீந்திரன் கையிலே கொடுத்தான். பெட்டியைப் பார்த்தால் அது புல்லாங்குழல் பெட்டி போல



# சுத்தமான முழு நறுமணமுள்ள காப்பி

நீங்கள் இலகுவாக வாங்கக் கூடிய விலையில்!









Stanes

ஸ்டேன்ஸ்
சிகப்பு லேபிள்
சுத்தமான காப்பி




ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி உங்களுக்கேற்ற சிறந்த கறு மணமுள்ள பலமான பானத்தை அளிப்பதோடு, அதிக டம்ளர்கள் காப்பியையும் அளிக்கிறது. நீங்கள் காப்பி வாங்கும்பொழுது, ஸ்டேன்ஸ் என்ற பெயரைப் பார்த்து வாங்குங்கள். இது உங்களுக்கு உயர்ந்த ரகத்திற்கு உத்திரவாதம்.
ஸ்டேன்ஸ் சிகப்பு லேபிள் சுத்தமான காப்பி காற்று புகாத ½, 1, 3, 7, 14, 20 பவுண்டு டின்களில் புத்தம் புதியதாக பாக் செய்யப்பட்டு உங்களுக்கு கிடைக்கின்றன.

எல்லோரும் வாங்கக் கூடிய நல்ல காப்பி!

**தி யுனைடெட் காப்பி சப்ளை கம்பெனி லிமிடெட்,**
**கோயம்புத்தூர், தென் இந்தியா**

திருவனந்தபுரம் ஏஜண்டு:
மிஸ்டர் ஜி. ஆர். ஹரிஹரன், செந்திட்டை, சாலை, திருவனந்தபுரம்

மதுரை டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:
மெஸர்ஸ் எம். எஸ். புகழகிரி நாடார் சன்ஸ், ஜெனரல் மெர்ச்செண்ட்ஸ்
கீழ மாசி வீதி, மதுரை

இருந்தது. ரவீந்திரன் கடிதத்தை வாங்கிப் பரபரப்புடன் பிரித்தான். டாக்டர் சுரேஷ் எழுதியிருந்தார்:

" அன்புக்குப் பாத்திரமான ரவீந்திரனுக்கு!

'தோழனோடு ஏழைமை பேசேல்' என்பது வசனம். நண்பர்களோடு ஒருவன் தன்னுடைய வறுமையைப் பற்றிப் பேசக் கூடாது என்பது உண்மைதான். ஆனாலும் வாழ்க்கைப் பாதையிலே நடந்து செல்லும் ஒருவனுக்கு அங்கங்கே சுமை தாங்கிகள் வேண்டும். பாரத்தைச் சற்று இறக்கி வைத்துக் களைப்பாற வசதியில்லையென்றால் வாழ்க்கையின் யாத்திரை சலிப்புத் தட்டிவிடும். இதை உங்களுக்கு நினைவுபடுத்துகிறேன்.

இத்துடன் என்னுடைய அன்புப் பரிசாக ஒரு புல்லாங்குழல் வருகிறது. வித்தியாசமாக நினைத்துக் கொள்ளாமல் இதைப் பெற்றுக் கொள்ள வேண்டும். தங்களுடைய உள்ளம் இப்பொழுது இருக்கும் நிலையில் சங்கீதம் ஒன்றே அதற்குச் சரியான மருந்து. உங்கள் உள்ளத்தின் சுமையை யெல்லாம் இசையிலே கொட்ட வேண்டும். இல்லையெனில் மனசிலே பொங்கிப் பெருகும் உணர்ச்சிகளுக்கு வெளியீடு என்பது இல்லாமல், உங்களுடைய உடம்பு பாதிக்கப்படும். ஒரு வைத்தியன் என்ற முறையில் நான் கொடுக்கும் மருந்தாக இதை ஏற்றுக் கொள்ள வேண்டும். நண்பன் என்று என்னை நீங்கள் கருதும் பக்ஷத்தில், தங்களுடைய எதிர்கால முன்னேற்றத்துக்கு இதை என்னுடைய பிரார்த்தனைப் பரிசாகக் கருதி அங்கீகரிக்க வேண்டும். தங்களுடைய தன்மான உணர்ச்சியினால் இதைப் புறக்கணித்து விடக் கூடாது. நேற்று என்னிடம் தங்களுடைய இதயக் கதவைத் திறந்தீர்கள். தங்களுடைய மனிதப் பண்பை அப்பொழுது நேருக்கு நேர் கண்டு கொண்டேன். தங்களுடைய உடம்பின் நிறை நூற்று முப்பத்தைந்து ராத்தல். ஆனால் உள்ளத்தின் நிறையை எடை போட்டுச் சொல்வதற்கில்லை. தங்களோடு பேசிய விநாடியிலேயே தங்களை எனக்குப் பிடித்து விட்டது. எந்தச் சமயத்திலும் எந்த வகையிலும் தங்களுக்கு உதவி செய்ய ஒரு நண்பன் இருக்கிறான் என்று உரிமையோடு கருதுங்கள். எனக்கு அதைவிட சந்தோஷம் வேறொன்றில்லை.

சுரேஷ்"



இந்தக் கடிதத்தைப் படித்ததும் ரவீந்திரனுக்குக் கண்ணீர் வந்தது! இருள் மயமான ஆகாசத்தில் திடீரென்று ஒரு மின்னல் மின்னினால் எப்படியிருக்கும்! அப்படியிருந்தது அவனுக்கு. தன்னுடைய துன்ப மயமான வாழ்வில், தன்னுடைய விசித்திரமான மனப் போக்குகளுக்கிடையே இப்படியும் ஒரு நட்பா? என்ன விந்தை என்று நினைத்துக் கொண்டான். அதே சமயத்தில் வழக்கமான சந்தேகமும் ஏற்பட்டது. 'இருளினூடு மின்னுகிற மின்னல் ஒரு கணம் ஒளி வீசி விட்டு மறைந்து விடுமே! நிலையற்றதாயிற்றே அது! டாக்டரின் இந்த அன்பும் அப்படித்தான் ஆய் விடுமோ!'

இவ்வாறு எண்ணிக் கொண்டே புல்லாங்குழல் பெட்டியைத் திறந்தான். கடை வீதியிலே அன்றுதான் வாங்கியிருக்க வேண்டும், அந்த வாத்தியத்தை! பெட்டியைத் திறந்ததும், அதிலிருந்து 'புது வாசனை' அப்படியே வந்தது! அந்த வாசனையை நுகர்வதற்குள், பூஜை அறையிலிருந்து சாம்பராணி தூபத்தின் மணம் 'கம கம' என்று கமழ்ந்து வந்தது. ரவீந்திரனுடைய நெகிழ்ந்த உள்ளத்திலே அந்த வாசனை அப்படியே சென்று 'கம்' என்று நிரம்பிற்று. இடையிலே சில நாட்களாக சங்கீத சரஸ்வதியின் சந்நிதியை மறைத்துக் கொண்டு படுத்திருந்த நந்தி விலகி விட்டது போன்ற ஒரு பிரமை ரவீந்திரனுக்கு உண்டாயிற்று. அவனுடைய மனக் கண்ணிலே ஸ்வர கன்னிகைகள் எழுவரும் கைகோத்து நடனமாட, நடுநாயகமாக சங்கீத சரஸ்வதி கொலுவீற்றிருந்தாள்! உடம்பு முழுதும் தன்னை மறந்த ஒரு லயம் கூடிற்று. அப்படியே அந்தப் புல்லாங்குழலை எடுத்து உதட்டிலே பொருத்தினான். விரல்களிலே ஒரு காந்த சக்தி எழுந்து விளையாடிற்று. இதயத்திலே ஒலியின் ஊற்றுக் கண் திறந்து கொண்டது. அப்படியே நாத வெள்ளம் பெருகிப் புறப்பட்டுப் புல்லாங்குழலிலே பாய்ந்து வந்தது.

சங்கராபரண ராகமா அது! எத்தனை அமானுஷ்ய சக்தியோடு குதித்து வந்து நடனம் ஆடுகிறது அது!

மாடியிலே உட்கார்ந்திருந்த சந்திரிகா அப்படியே அந்த இசையினால் கவரப்பட்டுப் படிகளிலே இறங்க வந்தவள், ரவீந்திரனுடைய தன்னை மறந்த நிலையைக் கண்டு முதலாவது படியிலேயே நின்று விட்டாள். எத்தனை நேரம் அப்படி நின்றாள் என்று அவளுக்கே தெரியாது.

சங்கராபரணம், பைரவி, கேதார கௌளம், சாவேரி என்று ராகங்கள் எல்லாம் ஒன்றையொன்று தொடர்ந்து அணி அணியாக வந்து நின்று சேவை

சாதித்தன. மனிதனையும் அவனுடைய சிறுமைகளையும், உலகையும் அதன் ஓட்ட சாட்டங்களையும், இந்த பூமியையும் இதன் வரம்புகளையும், கடந்த ஒரு அமானுஷ்யமான சொப்பனபுரியை நோக்கிப் புல்லாங்குழலின் கற்பனைக் காற்றிலே மேலே மேலே பறந்து கொண்டிருந்தான் ரவீந்திரன். இதோ! மத்திமம் பேசுகிறது! என்ன சுகம்! என்ன சுகம்! அந்தப் புல்லாங்குழலின் மென்மையான துவாரங்களினூடு புன்னுகவராளி வளைந்து நெளிந்து வருகிறது! இணையொலிகள் எல்லாம் பின்னியும் தவழ்ந்தும் பேசுகின்றன! என்ன நாதம்! எத்தனை சுக பாவம்!



உச்சிப் பிள்ளையார் கோவிலில் இருந்து திரும்பிக் கொண்டிருந்த கந்தப்பன் அப்படியே மெய்ம் மறந்து ஒரு கணம் வீதியில் நின்றான்! தாயுமானவர் தெருவிலிருந்தா வருகிறது இந்த இன்னொலி? கந்தப்பன் திகைத்துப் போனான்.

பொதிகைமலைக் காட்டிலே தன்னுடைய இனத்தவரான மலை ஜாதி மக்கள் விழாக் காலங்களிலே ஊதுகிற சொக்கி குழலைக் கேட்டு அனுபவித்ததுண்டு அவன். அந்த மலைப்பிராந்தியங்களில் புன்னுகவராளியை ஒட்டிய ஒரு சிறு ராகத்தில் அதிக நெரடு இல்லாத ஒரு மெட்டை அவர்கள் வாசிப்பதுண்டு. அதுவே கேட்பதற்கு எத்தனையோ இதமாக இருக்கும். ஆனால் இந்த ராகமும், இதை வாசிக்கும் விதத்திலே உள்ள சாயல்களுமோ என்றால் இதுவரை எங்குமே கேளாதனவாக அல்லவா இருக்கின்றன!

பொதிகை மலையிலே அந்திப் பொழுதில் சூரியன் அஸ்தமிக்கும் காட்சியைக் கந்தப்பன் பல முறைகள் பார்த்திருக்கிறான். எண்ண முடியாத வர்ணங்களும் கோலங்களுமாக மாலைக் கதிரவன் வானத்திலே அள்ளித் தெளிப்பான்! அப்படியல்லவா இருக்கிறது இந்தக் குழல் இசை!

கந்தப்பன் அந்த இசையின் காந்த சக்தியினால் வேகமாகக் கவரப்பட்டுத் தாயுமானவர் தெருவிலே 'விறு விறு' என்று நடந்தான். இசை வந்த வீட்டின் படிகளிலே சற்றும் தயங்காமல் ஏறினான்.

கந்தப்பன் திருச்சிராப்பள்ளிக்குப் புதியவன். பொதிகை மலைப் பளிஞர் கூட்டத்துத் தலைவனின் சகோதரி மகன் அவன். மலைஜாதியினரை முன்னேற்றும் நோக்கத்துடன் பாதிரிமார்கள் செய்த ஏற்பாட்டின் பலனாக இப்பொழுது அர்ச் சூசையப்பர் கல்லூரிக்குப் படிக்க வந்திருக்கிறான். மற்றப்படி, மலைஜாதி மக்களுக்கே இயல்பாக அமைந்த அவனுடைய பரிசுத்தமான குழந்தை உள்ளத்தில், நகர வாழ்க்கையின் கறை இன்னும் படியவில்லை. வாலிப வயதின் வேகமும், கபடம் இல்லாத மனசின் பாசமும், எல்லாவற்றிற்கும் மேலாக அவனுடைய மலை நாட்டுச் 'சொக்கி குழல்' என்ற வாத்தியத்தில் அவனுக்கு இருந்த பக்தியும் ஈடுபாடும்,—எல்லாமாகச் சேர்ந்து அவனுடைய கால்களின் வேகத்தை அதிகரித்தன. அப்படியே வாசலைத் தாண்டி அறைக்குள்ளே சென்றான் கந்தப்பன்!

ஆனால் என்ன பேராச்சரியம்! கந்தப்பன் அப்படியே திகைத்துப் போய் நின்றான்! தன்னை மறந்து புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்த அந்த அற்புத புருஷனுக்கு எதிரே சற்றுத் தூரத்தில் ஒரு நல்ல பாம்பு படத்தை விரித்துக் கொண்டு நின்று இசையிலே கிறங்குகிறது! உள் அறையின் கதவோ சாத்தியும் சாத்தாமலும் இருக்கிறது. வேறு யாரும் மனிதர்களைக் காணோம், அந்த அறையில்! இந்நிலையில், அந்தப் புல்லாங்குழல் வித்துவான் இசையின் போக்கை மாற்றினால், அல்லது வாசிப்பதை ஒரு கணம் நிறுத்தினால் என்ன ஆகும்?

கந்தப்பனுக்கு நல்ல பாம்புகளின் சுபாவம் தெரியும். ஒரு கணம் நின்று தயங்கினான். இதற்குள் என்ன நேர்ந்தது?

மாடிப் படியிலிருந்து ஒரு பெண்ணின் குரல் பதற்றத்தோடு "ஐயோ! பாம்பு! பாம்பு!" என்று கதறியது. மறு விநாடி உள் அறையைத் திறந்து கொண்டு ஒரு பெண்மணி கையும் காலும் பதற ஓடி வந்தாள். புல்லாங்குழல் வாசித்துக் கொண்டிருந்த மனிதனோ இந்த உலகத்திலேயே இல்லை! வெளியே நின்று செயல் புரிய வேண்டிய அவனுடைய ஐந்து புலன்களும் உள்ளத்திலே போய் ஒன்றி நின்றிருந்தன அவனுக்கு! புன்னுகவராளி தவழ்ந்து நலியவே இப்பொழுது அதைப் பின்னித் தொடர்ந்து சிம்மேந்திர மத்யமம் வந்தது! கந்தப்பனுடைய முகக் குறி மாறிற்று. படம் எடுத்து நிற்கும் பாம்பையே கவனித்தவாறு ரவீந்திரனை நோக்கி நடந்தான் கந்தப்பன்! (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

# நாளுக்கு நாள் அதிக மிருது வான எழிலோங்கும் சருமம் . . .

கேடில்* கலந்த
ரெக்ஸோனா
மறைந்திருக்கும்
உங்கள் அழகை
வெளிப்படுத்தட்டும்

ரெக்ஸோனாவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் மெதுவாகத் தேய்த்து பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பாயும், மிருதுவாவதையும் காண்பீர்கள். அதனால் புதுப் பொலிவுடன் விளங்குவீர்கள்.

* சருமத்திற்கு ஊட்டமளித்து மிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

பெரிய சைஸிலும் கிடைக்கிறது




## ரெக்ஸோனா

கேடில் கலந்த சோப் இது ஒன்றே

ரெக்ஸோனா ப்ரோப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது. RP. 131-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a newspaper in Ceylon